ஸ்ரீ

ஸ்ரீமஹோமாராஜாயநம:

# ஏகாதசிமகத்துவம்.

இஃது

இயற்றமிழாசிரியராகிய-அஷ்டாவதானம்

வீராசாமி செட்டியாரவர்கள்

மாணாக்கரும்

கவர்ன்மெண்டு நார்மல் கல்லிஜ்

தமிழ்ப்புலவருமாகிய

கோ. இராஜகோபாலபிள்ளை

அவர்களால

முன்பதிப்பித்தபிரதிக்கிணங்கச்

சிதம்பரம்,

கருணாநந்தசுவாமிக

ளவர்களால்

பார்வையிடப்பட்டுச்

சிந்தாத்திரிப்பேட்டை

கேசவமுதலியாரவர்களால்

தமது

பிரபாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

௧௮௯௫-ஏப்பிரல்மீ.



ஸ்ரீ

வரவரமுநயேநம:

# ஏகாதசி மகத்துவம்.

## தனியன்கள்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொன்பூத்தபராரைநறும் பூம்புளியாய்க்குருகைநகர்
பொந்தாங்காலை
மன்பூத்தமுதுமறைதேர் வேதியர்தங்குலவிளக்காய்
வந்துவானோர்
மின்பூத்தவெண்மதிச்செஞ் சடையரனுந்தொழுமரங்க
விமலற்கந்நாள்
கொண்பூத்ததமிழ்மறையின் பொருள்விரித்தமுனியரசைக்
குறித்துவாழ்வாம்:

மறஞ்செய்பெரும்பல்சமய முரணழியப்பிணக்கறுத்து
வயங்குநான்மைத்
திறஞ்செய்பழமறைமுடிவின் றணியாஞ்சீர்ப்பாடியமுன்
செய்வான்செம்பொன்
நிறஞ்செய்மதிதொடுபுரிசைப் பூதூர்க்கண்வந்தருளு
நிமலஞான
அறஞ்செய்பரசமயகோ ளரியிணைத்தாளெஞ்ஞான்று
மகத்துள்வைப்பாம்.
பூவிறுநான்முகப்புத் தேட்கெகினப்புள்வழிவாய்ப்
பொலிந்துதெய்வப்

பாவிறுநால்வேதப்பழம்பொருளைமுனமுரைத்த
பரிமேலானைத்
தேவிறுதமிழ்மறையை மதுரகவிமுனிவனுக்குத்
தெரித்தநங்கள்
நாவிறைக்கழற்கமல முளக்கமலம்பிறக்கமல
நவிற்றுசேர்வாம்.

பன்மைசான்மெய்ஞ் ஞானப்பனுவலுணர்முனிவர்குழாம்
பராவவன்னோர்
வண்மைசான்மனத்தினைய மொருவமிமிசைச்செவ்வே
வலக்கையோச்சி
மன்மைசான்வேதத்தி னூங்கொருநூற்பிறிதில்லா
வான்மைபோவொப்
பின்மைசால்கேசவனிற் பெருந்தேவின்றெனுமுனியை
யிறைஞ்சுவாமால்.

ஏகாதசி துவாதசிகளின் வரலாறு.

சூரியவம்சதிலகனாய் அயோத்தியா நகரத்தையாளுகின்ற திலீப சக்ரவர்த்தி வசிஷ்டமகாருஷியைப் பிரணாமஞ்செய்து ஸ்ரீபரமபத சாதனமாகிய வைதிகரகசியங்களை அடியேனுக்குப்பிரசாதித்தருளவேண்டுமென் ... பிரார்த்தியாநின்ற திலீபசக்ரவர்த்தியைப்பார்த்து வசிஷ்டமகாமுனிவர் சொல்லியருளுகின்றார் கேளாய்திலீபசக்ரவர்த்தியே நைமிசாரணியவாசிகளாகிய சௌநகாதிமகாருஷிகள் உதயகாலத்திலெழுந்திருந்து வழக்கப்படிப்பரிசுத்தநீராடிக் கேசவாதிதுவாதசதிருநாமங்களையுச்சரித்துப் பன்னிரண்டு திருமண்தரித்துத் திருவஷ்டாக்ஷரத்தைஜபித்து நித்தியகடனை முடித்துக்கொண்டு சூதபுராணிகரை நோக்கி மோக்ஷசாதனமாகிய பரமரகசிய தர்மத்தைச்சொல்லியருளவேண்டுமென்று பிரார்த்திக்கச்சூதபுராணிகர் அந்தமுனிசிரேஷ்டர்களைப்பார்த்துச் சொல்லுகின்றார் வாருங்கோள் முனீந்திரர்களேபூர்வத்தில் இவ்வாறுகேட்ட பார்வதிக்குக்காளகண்ட திரிநேத்திரராகிய ஸ்ரீருத்திர பகவானானவர் உபதேசித்த பரமரகசிய தர்மத்தை உங்களுக்குச் சொல்லுகிறேனென்று சொல்லுகின்றார்.

## ஸ்ரீருத்திரபகவானுடையவாக்கியம்.

வாராய் பார்வதி ஸ்ரீசர்வேஸ்வரனுடைய கூர்மாவதாரவைபவத்தையும், ஸ்ரீசர்வேஸ்வரியாகிய மஹாலட்சுமியவதாரத்தையும், ஏகாதசிவிரத வரலாற்றையும் அதன் மகாத்மியத்தையும் சொல்லுகிறேன் அதிவிநயபக்திபூர்வகமாகக்கேட்கக் கடவாயென்று சொல்லுகிறார். அத்திரி மகாருஷியினுடைய புத்திரராகியும், சமஸ்தலோகங்களும் பயப்படத்தக்க கோபிஷ்டராயும், என்னுடைய அம்சத்திலே தோன்றினவராயும், ஸ்ரீஹரியினுடைய திவ்வியசரணாரவிந்தங்களிலேயேவைத்த சிந்தையையுடையவராயும் விளங்குகின்ற துருவாசமஹாருஷியானவர் மஹாமேருகிரியிலே வித்தியாதரர்கள் வாசஞ்செய்யாநின்ற பாரிசத்தையடைந்து அந்தக்கின்னரர்களாலே பூஜிக்கப்பட்டவராய் அவ்விடத்தில் ஒருவருஷம் வாசஞ்செய்துக்கொண்டிருந்தனர். ஒருநாள் ஸ்ரீவைகுந்தத்திற்சென்று ஒரு வித்தியாதரஸ்திரீயானவள் சமஸ்த லோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரராயும் பரமாத்துமாவாயும் இராநின்ற ஸ்ரீவிஷ்ணுவினுடைய திருமார்பத்திலெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீமகாலட்சுமிதேவி ஆநந்திக்கும்படி யாழ்வாசித்துத் தீர்த்தப்பிரசாதம் லபிக்கப்பெற்று லோகநாயகியினுடைய ஸ்ரீபாதாரவிந்தங்களில் தரித்த பூமாலையை யாழில்கட்டிக்கொண்டு வருகிறதை இந்தத்துருவாசருஷியானவர் கண்களிக்கக்கண்டு அந்தவித்தியாதரகன்னிகைக்குத் தண்டனிட்டு அம்மாலையைப்பெற்றுக்கொண்டு இந்திரலோகத்துக்கெழுந்தருளிச் சமஸ்ததேவகணங்களும் ருஷிகளும் புடைசூழ்ந்துவரச் சகலமங்கலவாத்தியங்கள் முழங்க ஐராபதத்தின்மேல் பவனிவருகிற இந்திரனைக்கண்டு இந்தமாலையைக்கொடுக்க அவன் இந்தமாலையின்பிரபாவத்தையறியாமல் தன் அங்குசத்தினால்வாங்கித் தானேறிவருகின்ற யானையின் மஸ்தகத்தின்மேல் வைத்துவிட அதை அந்தமத்தகஜமானது தும்பிக்கையாலெடுத்துப் பூமியிலெறிந்து தனதுபதங்களால் மிதித்தது. அதுகண்டமாத்திரத்தில் அந்தமகாருஷியினுடைய புருவங்கள்நெறிய இரண்டுகண்களுஞ்சிவந்து சமஸ்ததேவசமூகங்களும் பிரம்மகல்பாந்தகாலமோ அல்லதோவென்று திடுக்கிட்டுப்பயந்துசிதறியோடும்படி அதிகோபத்தையடைந்து இந்திரனைப்பார்த்து ஓ இந்திரா யாருடையகடாக்ஷ வீக்ஷணத்தினாலே பிரமனும்நீயுஞ்சங்கரனுஞ் சிருஷ்டிதிதிசங்காரமாகிய தொழில்களைப்பெற்று லோகேஸ்வரர்களா யிருக்கின்றீர்களோ அந்தமஹைஸ்வரியினுடைய பிரசாதமாகிய புஷ்பமாலையை நான்செய்த தவப்பலத்தினாலே பெற்று நீஇப்போதுவருகிற பவ

ளி. மஹோச்சவத்தைக்கண்டு சந்தோஷித்து உனக்குக்ஷேமமுண்டாகும்படிக்கொடுத்தேன் அதைநீ அநாதரஞ்செய்தபடியால் உன்னுடையதிரிலோக ஐஸ்வரியமும் க்ஷீணித்துப்போய்த் துன்பமடையக்கடவாயென்று கோபகர்ச்சனைபோல அதட்டிச் சாபமிட்டனர். உடனே சத்ருஜித்து ஸுரத்தமே திருமேனியாகவுடைய ஸ்ரீஹரி திருமார்பில் வீற்றிருந்து சாயனாதிவிதித்வாதி சமஸ்தஜீவகோடிகளுக்குந் தாங்களே ய்தவினைக்குத்தக்கபடித் தநுகரணபுவன போகங்களைக் கொடுத்தருளுகின்ற பெரியபிராட்டியாருடைய இலேசாமிச அவதாரமாய் இந்திரலோகத்திலெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமஹாலட்சுமி தன்னிச்சையாகவே அந்தர்த்தானமாயினள். கற்பவிருக்ஷ காமதேனுவாதி சகலவளப்பங்களுந் திருப்பாற்கடலை யடைந்துவிட்டன. எதேச்சையாக ஸ்ரீமஹாலட்சுமியானவள் மறைந்துவிட்டவுடனே பிரமனும், நானும் மற்றத்தேவர்களும், கந்தருவர்களும், யட்சர்களும், கின்னரர்களும், தானவர்களும், நாகர்களும், மனுஷியர்களும், ராக்ஷதர்களும், பசுபக்ஷி விருக்ஷ முதலிய சமஸ்தபிராணிகளும், அந்தப் பராசக்தியினுடைய கடாக்ஷம் நீங்கினபடியால் யாதொரு செயலுமில்லாமல் பசிதாகமுதலியவற்றால் பீடிக்கப்பட்டுச் சர்வகாலமுந் துக்கத்தையே அநுபவித்துக்கொண்டிருந்தோம்.

வாராய் ஸ்ரீஹரியினுடைய அநந்தகல்யாண குணாநுபவத்திலேயே பிரியமுள்ள கருணைவத்யாகிய பார்வதி அப்போது திரிபுவனகர்த்தாவாகிய இந்திரனானவன் முனீந்திரர்களோடுந்தன் பரிவாரங்களோடும்வந்து என்னை அடைக்கலமடைந்து முறையிடநானும் என்னுடைய பரிவாரங்களோடு அந்தத்தேவர்களை அழைத்துக்கொண்டு பிரமதேவனிடத்தில் சரணாகதஞ்செய்து முறையிட்டேன் அவர் என்றால் என்ன செய்யத்தக்கது அகிலலோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரராயும் பரமாத்துமாவாயும் விளங்குகின்ற ஸ்ரீமந்நாராயணனை யல்லாமல் நம்மெல்லோருக்கும் வேறெதிக்குமுண்டோ வாருங்கோள் தேவர்களே முனிவர்களேயென்று அழைத்துக்கொண்டு திருப்பாற்கடலின் வடபக்கத்தில்சேர்ந்து மந்திரராஜமாகிய திருஅஷ்டாக்ஷரத்தினும் ஸ்ரீபுருஷசூக்தத்தினும் பரமேஸ்வரராகிய ஸ்ரீமந்நாராயணனைத் தியானித்தோம் தியானித்துக் கொண்டிருக்கையில் பக்தபராதீனராகிய ஸ்ரீஹரியானவர் திருமுடியில் மாணிக்ககிரீடமும், செவிகளில் மகரகுண்டலங்களும், வெண்டாமரைபோன்ற நேத்திரங்களில்கருணையும், திருமார்பில் ஜகந்மாதாவாகிய பெரியபிராட்டியாரும், கௌஸ்துபாபரணமும், வனமாலையும், திருக்கைகளில் சங்குசக்கரங்களும், அபயவரதமும்,

திருவனாயினிடத்துப் பிராம்பரமும், பிரமஸ்ருஷ்டிப சயஸ்தாவரஜங்கம சமூஹங்களுக்கும் ஆதாரமாகிய திருவடிகளிலுள்ள சிலம்புகளும், பிரகாசிக்க ஸ்ரீவேதமே சொரூபமாகிய கருடன்மேல் ஆரோகணித்துப்பிரசன்னராய் எழுந்தருளினார் எழுந்தருளினமாத்திரத்தில் நாங்களெல்லோரும் பொருக்கென எழுந்து கண்களில் ஆனந்தபாஷ்பம் ஒழுகத் தண்டாகாரமாகப் பூமியில் விழுந்து சேவித்து மாதவா கோவிந்தா வாசுதேவா திருவிக்கிரமா என்று ஸ்ரீபகவானுடைய சகஸ்ரநாமங்களாலுந் தோத்திரஞ்செய்து மூன்றுமூன்றாக அஞ்சலி பத்தர்களாய் நின்றுகொண்டிருக்க ஸ்ரீபகவானானவர் எங்களைப் பார்த்து வாருங்கோள் என்னுடைய தாசர்களாகிய பிரமாதிதேவர்களே பரமரிஷிகளே உங்களுடைய மனோபீஷ்டத்தை நிறைவேற்றுகிறேன் பயப்பட வேண்டாம் ஸ்ரீமகாலட்சுமியானவள் சுவர்க்கலோகத்தைவிட்டு அந்தர்த்தானமாய்த் திருப்பாற்கடலை யடைந்தபடியால் சகலலோகங்களுந் துக்கத்தையடையும்படி ஆச்சுது அந்த ஸ்ரீமஹாலட்சுமி திருஅவதாரநிமித்தம் திருப்பாற்கடலைக் கடையவேண்டும் ஆகையால் நீங்களும் தானவர்களுமாகச் சென்று மந்தரகிரியை மத்தாகநட்டு வாசுகியைத் தாம்பாகச் செய்து பரிசுத்தநீராடி எம்முடைய பன்னிரண்டு திருநாமங்களை உச்சரித்துக்கொண்டு திருமண்தரித்து ஸ்ரீலட்சுமிசமேதனாக என்னைப் பாவனைசெய்து இந்திரியங்களையடக்கி ஆகாரநித்திராதிகளையொழித்து மனதை எம்முடைய திருவடியிற் செலுத்தி ஸ்ரீபுருஷோத்தமனை வாயினாற் செபித்துக்கொண்டு எம்முடைய சக்தியினுடைய பலத்தைப் பெற்றுத் திருப்பாற்கடலைக்கடையுங்கள் நான் கூர்மாவதாரமாய் அந்தப் பர்வதத்தைச் சகலவிதத்தாலுந் தாங்குகிறோம் நீங்கள் க்ஷேமத்தை அடையப் போகிறீர்கள் பயப்படவேண்டாமென்று திருவாய்மலர்ந்தருளி அந்தர்த்தானமாயினர்.

ஸ்ரீபரமசுவாமியினுடைய கட்டளையைச் சிரசாக வகித்துப்பிரமன்முதலாகிய தேவர்களும் நானும் பரமரிஷிகளுந் தானவர்களோடு சென்று நித்தியகிரமப்படி நீராடித் திருமண்தரித்துப் பகவந்நாமங்களைச் செபித்துக்கொண்டு மந்தரகிரியைத் திருப்பாற்கடலில் நட்டு வாசுகியைத் தாம்பாகச்செய்து ஸ்ரீமகேஸ்வரியாகிய லட்சுமிசமேதனைக ஸ்ரீபுருஷோத்தமனைப் பாவனைசெய்து ஸ்ரீபகவந்நாமத்தை உச்சரித்துக்கொண்டு பெரிய பிராட்டியாருடைய அவதாரநிமித்தம் விஷயங்களில் செல்லவொட்டாமல் மனதை ஒருமைப்படுத்தி ஸ்ரீகமலாட்சருடைய சரணாரவிந்தங்களைத் தியானித்து ஆகாரநித்திரைகளையொழித்து உபவாசமிருந்து திதிகளில் உத்தமமான ஏகாதசியில் கடைகின்ற

போது ஸ்ரீபகவானானவர் கூர்மாவதாரமாய் அந்தப்பர்வதத்தை மு
துகிலேசுமந்து சாயவொட்டாமல்-ஒரு புஜத்தினால் அதன் சிகரத்தைத
ப்பற்றிக்கொண்டு நின்றனர். அப்படிப் பிரமன் முதலாகிய தேவர்க
ளும் நானும் முனிசிரேஷ்டர்களும் பிராமணோத்தமர்களும் தானவ
ர்களும் ஸ்ரீமஹாலட்சுமியினுடைய அவதாரத்தைக் கோரினவர்களா
ய் இருபுறமும்நின்று கடைந்துகொண்டிருக்கையில் முதலிலே கால
கூடவிஷம் பிரளயகாலாக்கினிக்குச் சமானமாகப்பிறந்தது அதுகண்
டு இந்திரன்முதலானவர்களும் ரிஷிகணங்களும் பிராமணோத்தமர்க
ளும் தானவர்களும் பிராணபீதியடைந்து ஓடத் தலைப்பட்டார்கள்
அங்குஓடுகின்ற தேவர்முதலிய சமூகங்களைப்பார்த்து நீங்கள்பயந்து
ஓடவேண்டாம் அந்தவிஷத்தை நானே புசிக்கிறேனென்று அவர்களு
க்குவாக்குக்கொடுக்க அவர்கள் என்னைத் தோத்திரஞ்செய்து கொண்
டுநின்றனர். வாராய் ஸ்ரீஹரி பாதாரவிந்தங்களில் பக்தியுள்ளவளே!
சகஸ்திரபால சூரியர்களுக்குச் சமானராயும் ஸ்ரீதேவி பூதேவிசமே
தராயும் இருக்கின்ற ஸ்ரீகருடவாகனனை மனதிலே தியானம்பண்ணிக்
கொண்டு சர்வதுக்கங்களையும் நிவர்த்தி பண்ணுகின்ற நாமத்திரய ம
ஹா மந்திரத்தைச் செபித்துக்கொண்டு அந்தச் சர்வலோகபயங்கர
மாகிய காளகூடவிஷத்தை நான் பானம்பண்ணுநிற்கையில் பக்தரக்ஷ
காகிய ஸ்ரீஹரியானவர் எனக்குள் அந்தரியாமியாய்நின்று அதைத்
தாமே கவளிகரித்தனர் அச்சுதா அநந்தாகோவிந்தாஎன்று பிரணவத்
தைமுதலிலும் நமஎன்னும் பதத்தை அந்தத்திலும்வைத்து யாவனொ
ருவன் பக்தியினாலே செபிக்கிறானோ அவனுக்கு மிருத்யுபயம் விஷ
ரோகம் அக்கினி முதலானதுகளாலேஉண்டாகிறபயமில்லை என்பதற்
குச் சந்தேகமுமுண்டோ. இப்படிக் காளகூட விஷமானது நாமத்
திரய பிரபாவத்தால் ஜீரணமாய்விட்டது. பிற்பாடு சமஸ்ததேவர்
முதலானவர்களும் பயமில்லாதவர்களாய்த்திரும்பிவந்துதிருப்பாற்க
டலைக் கடைந்துகொண்டிருக்கையில் அசுத்தமாயையினுடைய அமிச
த்தினால் சிவந்தவஸ்திரமும் சிவந்தபுஷ்பமாலையுமுடையவளாய் சே
ஷ்டாதேவிஉண்டாகி என்னால் என்னசெய்யத்தக்கதென்று எங்களைக்
கேட்க அந்தச்சேஷ்டாதேவியைப்பார்த்து நாங்களெல்லோரும் வா
ராய் கலிகாலபுருஷனுக்கு இஷ்டமுள்ள அமங்கலசொரூபியே யாவ
னொருவன் ஸ்ரீயப்பதியைத் தியானிக்காமலும் அவருடைய அடியார்
களைக்கண்டு வணங்காமலும் நடைப்பிணமாகத்திரிகின்றானோ அந்த
ப்பாபியினிடத்திலும் எந்தக்கிரகத்தில் நித்தியகலகம் உண்டாகிறதோ
அந்தக்கிரகத்திலும் எவன் தினமுங் குரூரவார்த்தைகளையும் அபத்தத்

தையும் பேசுகிறார்களோ அவனுடைய கிரகத்திலும் எந்தமனுஷியன் அ
ந்திப்பொழுதில நித்திரை செய்கிறார்களோ அவனுடைய கிரகத்திலும்
எந்தப்புத்தியீனன் பாதசுத்திபண்ணாமல் ஆசயனமும் - புல் - ஓடு-
கல்-மணல் - இருப்பு- தோல் - இவைகளாமல் தந்ததாவனமும் பண்
ணுகிறார்களோ அவனுடைய கிரகத்திலும் நிவாசமாயிருக்கக்கடவாய்
வாராய் துக்கதாரித்திரியங்களை நேத்திரங்களாகவுடையவளே எவ்விடத்
தில்தலைமயிர் மயிர்பஸ்பம் அஸ்தி உமித்தழல்உண்டோ அவ்விடத்
திலும் எந்தஅதமனுடைய தேகத்தில் ஓடு எலும்புசாம்பல்கள் இருக்க
வினுடைய சின்னங்கள் இருக்கின்றனவோ அந்தஅதமனிடத்திலும் எ
ந்தமூடமதிகள் எள்பிண்ணாக்கு கஞ்சாமுள்ளங்கி நீர்க்குகோவைக்கா
ய் முருங்கை நெய்பீர்க்கு சுரைக்காய்விட்டு வாரகம் வில்வக்காய் உல்
லிப்பூண்டு இவற்றைப்பட்சிக்கிறார்களோ அவர்களுடைய கிரகத்திலு
ம் அசுபத்தோடுகூடி வாசஞ்செய்யக்கடவாய். வாராய்தாரித்திரிய பி
ரியையாகிய மூதேவியே விஷ்ணுபிம்பமில்லாத இடத்திலும் துளசியி
ல்லாத நந்தவனத்திலும் திருமட்குறியும் சங்கு சக்கிராங்கிதமும் இல்
லாததேகியிடத்திலும் குடுகலத்தோடு வசிக்கக்கடவாயென்று கட்
டளையிட்டோம் மறுபடியும் கடையும்போது வாருணிதேவியுண்டா
னாள் அவளை ஆதிசேஷனும் அவனுக்குப் பின்னே தோன்றிய சந்திரா
தேவியைக் கருடபகவானும் திருமணம் புணர்ந்தார்கள். பின்புதிவ்வி
ய ரூபத்தையுடைய அப்சரஸ்திரீகளுக்களும் காந்தர்வர்களும் உதய
மானார்கள் அப்புறம் ஐராபதமும் உச்சைசிரவ அசுவமும் அமிர்த கல
சத்தோடு- தன்மந்திரியும் கற்பகமும் காமதேநுவும் உண்டாயின. ஸ்ரீ
பகவானுடைய அவதாரமாகிய தன்மந்திரிதவிர மற்றவஸ்துக்களையெ
ல்லாம் இந்திரன்பெற்றுக்கொண்டான் பின்பு ஆகாரநித்திராதிகளையொ
ழித்து உபவாசமாய் ஸ்ரீபுருஷசூக்தத்தைச்செபித்துக்கொண்டு கடை
யா நிற்கும்போது மறுநாள் துவாதசித்திதியில் சூரியோதய சமையத்
தில் பிரமதேவனுக்கும் சங்கரனாகியஎனக்கும் மற்றப்பிராணகோடிக
ளுக்கும் தாயாயும் சர்வலோகேஸ்வரியாயும் லீலாவிபூதிக்குநாயகியா
கியும் விளங்காநின்ற ஸ்ரீமஹாலட்சுமியானவள் திருவவதரித்தனள் அந்
தஜகந்மாதாவினுடைய திருவவதாரத்தைக் கண்டமாத்திரத்திலே பிர
மன்முதலாகிய சமஸ்ததேவர்களும் நாரதபராசருஷிகளும் பிராம
ணோத்தமர்களும் ஹரீ ஹரீ ஹரீ என்றவாயால் துதித்துக் கண்களில்
ஆநந்தபாஷ்பம் ஒழுகும்படிப் பூமியில்விழுந்து சேவித்துத் தோள்
களைத்தட்டிக்கொண்டு ஆநந்தமிகுதியாக வோடியும் நர்த்தனஞ் செய்

தும் தேவதுந்துபி முதலிய வாத்தியங்களை முழக்கியும் திவ்விய துதிகளைச்செலுத்திக்கொண்டும் விட்டுப்பிரிந்த பசுவைக்கண்ட கன்றுகளைப் போல நாங்களெல்லோரும் பரமாநந்தத்தை யடைந்தோம் அதற்கு முன் அடங்கியிருந்த வாயுமனோகரமாய் வீசியது ஒளிமழுங்கியிருந்த சூரியனும் அக்னியும் அதிதேசசையுடையவர்களாய்ப் பிரகாசித்தார்கள் திக்குகள் நன்றாய்விளங்கின. அதற்குமேல் ஸ்ரீமகாலட்சுமிக்குப் பிராதாவாகவும் நட்சத்திரங்களுக்கு அரசனாகவும் சகல லோகங்களுக்கும் அம்மானாகவும் அமிர்தகிரணங்களையுடைய சந்திரன் உண்டானான். பின்புலோகபாவனியாயும் புண்ணியரூபியாயும் இருக்கிற ஸ்ரீதுளசிதேவி ஸ்ரீஹரிக்கு அர்ச்சனைநிமித்தம் அவதரித்தான் பிரம ருத்திராதிகளாகிய நாங்களெல்லோரும் இஷ்டசித்தியடைந்தவர்களாய் அந்த மந்தர பர்வதத்தை முன்னிருந்த இடத்தில்தானே கொண்டுபோய் வைத்து விட்டோம் பரமபிதாவாகிய ஸ்ரீபரந்தாமரானவர் எங்களுக்குப்பரம மாதாவாகிய ஸ்ரீமகாலட்சுமியைத் திருமணம்புணர்ந்து அந்தத்திருத்துழாயாலே அர்ச்சிக்காநின்ற எங்களெல்லோருக்கும்வேண்டியவரங்களைக்கொடுத்துச் சொல்லுகின்றார்.

வாருங்கோள் பரமபாகவதர்களே சகலஉபத்திரவங்களையும் நசிக்கச்செய்கின்ற ஏகாதசியானது ஸ்ரீமஹாலட்சுமி தரிசனார்த்தமாக உங்களால் உபவாசஞ்செய்யப்பட்டது. இன்றுமுதலில் உங்களுக்கும் சமஸ்தலோகங்களுக்கும் இந்தஏகாதசியானது உபவாசதினமாய்ஆகக்கடவது. வாரீர் விஸ்வாதிதேவர்களே ருஷிகளே பிராமணோத்தமர்களே எம்மார்பினிடத்தில் வசிக்கின்ற ஸ்ரீமஹாலட்சுமியையும்என்னையுந் திருத்துழாயாலே அர்ச்சித்துப்பூசித்து அந்தத்திருத்துழாயோடு அமிர்தபாரணஞ்செய்த தினமாகிய துவாதசியானது எப்போதும் எனக்கு இஷ்டமாகாநிற்கின்றது. ஆகையால் எவர்கள்இன்றுமுதல் ஏகாதசியில்உபவாசமிருந்து துவாதசி சூரியோதயத்தில் பரமபக்தியொடுதிருத்துழாயினால் மகாலட்சுமியையும் என்னையும்ஆராதிக்கின்றார்களோ அவர்கள் சகலகர்மபந்தங்களையும் விட்டுவிலகி என்றுமுடையஇருப்பிடமாகிய பரமபதத்தையடைவார்கள் எவர்கள்ஏகாதசியில்புசிக்கிறார்களோ எவர்கள்என்னைத் துவாதசியில் ஆராதிக்கவில்லையோ அவர்களுக்கு நரகத்திலே வாசமுண்டாகும் அதற்குச் சந்தேகமில்லையென்று திருவாய்மலர்ந்தருளித் திருப்பாற்கடலில் திருவனந்தவாழ்வான்மீது யோக நித்திரையிலெழுந்தருளினர். பின்பு நாங்களெல்லோருங்கூர்மரூபியாகிய பகவானைமிகவும் பத்தியோடுபூசித்துவணங்கித் தோத்திரஞ்செய்ய அந்தக்கூர்மரூபியாகிய சர்வேஸ்வரனானவர் பிரசன்னராய் எங்களை

க்கடாக்ஷித்து வாராய்சதுர்முகனே வாராய்சங்கரனே வாராய்இந்திரனே வாருங்கோள்தேவர்களே ருஷிகளே உங்களுக்குவேண்டியவரங்களைக் கேட்கக்கடவீரென்று திருவாய்மலர்ந்தருள நாங்களெல்லோருங்கூர் மரூபியாகிய சர்வலோகசரணியனைப் பிரணாமஞ்செய்து உம்முடைய தாசர்களாகிய எங்கள்நிமித்தம் மந்தரகிரியைத் தாங்கினதுபோலஇந்த ப்பூமியையும் பரித்து உம்முடையசொத்தாகிய எங்களையும் எங்களை யொத்த மற்றஜீவகோடிகளையுங் கைவிடாமற் காப்பாற்றவேண்டுமெ னத் தண்டனிட்டுக் கைகளைக்கட்டிக்கொண்டுமுறைமுறையாகநிற்கின் றஎங்களுக்குக்கருணைகூர்ந்து அப்படியேசெய்கிறேனென்றுவரங்கொ டுத்து இந்தப்பூமியைப்பரித்தருளினீர், பின்புஎனதுதந்தையாகியபிர மதேவருடைய கட்டளையின்படி நானும் இந்திரனும் தேவர்களுங்க ந்தருவர்களும் தானவர்களும் மனுஷியர்களும் தங்கள்தங்கள் இடத் துக்குப்போய்ச்சேர்ந்தோம், அன்றுமுதல்பிரமதேவனும் நானும்ம ற்றச்சமஸ்ததேவர்களும் ருஷிகளும் பிராமணர்கள் முதலியமனுஷி ய சிரேஷ்டர்களும் ஸ்ரீசர்வேஸ்வரனுடைய கட்டளையின்படி ஏகாத சிதோறும் உபவாசமிருந்து துவாதசியில் சாஸ்திரப்படி ஸ்ரீயப்பதி யை ஆராதித்துக்கொண்டுவருகிறோம்- நாங்களெல்லோருந்திருப்பாற் கடலைக் கடைந்தநாள்முதற்கொண்டு ஏகாதசிக்குஹரிதினம் ஹரிவாச ரம்என்று பேர்வழங்குமென்று சொல்லுகின்ற ஸ்ரீருத்திரபகவானைப் பார்த்துப் பார்வதிசொல்லுகிறாள். வாரீர்என்பிராணநாயகராகிய சங் கரபகவானே துவாதசியினுடைய பிரபாவத்தையுங்கேட்க என்மனம் அபேக்ஷிக்கின்றது அதையும்விரித்துச்சொல்லக்கடவீரென் றுபிரார்த்தியாநின்ற பார்வதியைப்பார்த்துச் சிவபெருமானவர் சொல்லுகின்றார்.

வரலாறு - முற்றிற்று.

---

# ஏகாதசி அனுஷ்டிப்பு.

ஸ்ரீருத்திரபகவான் வாக்கியம்.

வாராய்உமாதேவி துவாதசியினுடைய பிரபாவஸ்தமனமான மாத்திரத்தில் ஸ்ரீசர்வேஸ்வரரானவர் திருவுளமுகப்பாகிறார் ஏகாதசி உபவாசமாத்திரத்தால் சகலபாபங்களினின்றும் விடுபட்டுநிரதிசயான ந்த பரமபதத்தையடையக்கூடும் துவாதசியில் ஸ்ரீஹரியினுடைய தி ருவாராதனத்தை நொடிப்பொழுது காலஞ்செய்தபோதினும் அதனு லே அநேகம்பிறப்புகளில் பதினொரு இந்திரியங்களாலும் அறிந்தும்

அறியாமலுஞ்செய்திருக்கிற கர்மங்களெல்லாம் அழிந்துவிடும் அநேகமாயிரம் அசுவமேதங்களின்பலமும் அநேகமாயிரவர் சபேயவிரதபலமும் ஏகாதசியுபவாசபலத்தில் ஆயிரத்திலொரு கூற்றுக்குஞ் சரியாகமாட்டாவாம் வாராய்பார்வதி துவாதசியானது அறத்தையும்பொருளையும் இன்பத்தையும் மோக்ஷத்தையும் மற்றச்சர்வாபீஷ்டங்களையுங்கொடுப்பதாய் விளங்குகின்றது ஏகாதசிவிரதத்தைப்போலப் பாபத்திலிருந்தும் ரக்ஷிப்பது வேறொன்றுமில்லை. ஆதலால் இந்தஹரிவாசரத்தின் உபவாசத்துக்குச்சமானமான வேறொருவிரதமில்லை ஏகாதசி விரதத்தைவிட்டு மற்றவிரதங்களையநுஷ்டிப்பவன் தன்கையிலிருக்கிற உத்தமபோஜனத்தைவிட்டு பிக்ஷையெடுக்கிறவனுக்குச் சமானமாவான். சமஸ்தஇதிகாசபுராணாதிகளும் பட்சங்கள்தோறும் வைதிகவிரதமாகிய ஏகாதசிவந்துகொண்டிருக்கவும் ஒருவர்தான்முன்னே செய்துவிட்ட பாபகர்மங்களைக்குறித்துப் பயப்படுவானேனென்று சொல்லுகின்றன எந்தமூடாத்துமாவானவன் ஏகாதசிவிரதத்தை யநுஷ்டிக்கவில்லையோ அவன்பரமபதத்தையடையப் போகிறதில்லை ஏகாதசியில் உபவாசமிருக்கின்றமகாவிரதசீலனை அத்தினத்தில்போசனஞ்செய்யென்று சொல்லுகிறதுஷ்டபுருஷனுக்கும் பிராமணனையும் சிசுவையும் ஸ்திரீயையும்கோவையும் அதம்பண்ணினென்று சொல்லுகிறபாபாத்துமாவுக்கும் வித்தியாசமென்ன ஏகாதசியிலே தன்கையிற்கிடைத்தது வைதிகயாகத்தினுடைய புரோடாசமானாலும் அதில்-சிறிதும் உண்ணலாகாதென்று இதிகாசபுராணங்கள் சொல்லுகின்றமையால் அன்னத்தைப் புசிக்கலாகாதென்பதற்குச் சந்தேகமென் பிராமணாதிவருணங்களுக்கும் பிரமசாரியாதிஆசிரமத்தாருக்கும் ஸ்திரீகளுக்கும் ஏகாதசியில் உபவாசமிருப்பது முக்கியகடமையாயிருக்கின்றது முக்திசாதனமாகிய ஏகாதசியில்மாதாபிதாக்களுடைய சிராத்தம்வந்தபோதிலும் அந்தச்சிராத்தத்தை நிவர்த்திவைத்து ஸ்ரீஹரிதின உபவாசத்தை நிறைவேற்றி மறுநாள் துவாதசியில் அக்கருமத்தைநடத்தவேண்டும் பிதிர்தேவதைகளும் பிரமன்முதலாகிய தேவர்களும்நானும் ஏகாதசியில்நிந்தினமான அன்னத்தைப்புசிக்கமாட்டோம் ஆகையால் அந்தச்சிராத்தமானது ஏகாதசியிற்செய்தால் வியர்த்தமாய்விடும் எப்போதும்ஏகாதசியில் அன்னத்தைப்புசியாமலும் மத்தியபானம்பண்ணாமலும்பிராமணவதை செய்யாமலும் இருக்கவேண்டுமென்று வேதஞ்சொல்லுகின்றது.

வாராய்கௌரீ தசமிவேதையோடுகூடிய ஏகாதசிவிரதத்தைஅன்றையத்தினம் பிரயத்தினபூர்வகமாய் விட்டுவிடக்கடவன் சூரியோதய

சமயத்தில் திரயோதசியினஸ்ஸறக்குத் துவாதசிகலா*மாத்திரமிருந்தாலும் அப்போது துவாதசி உபவாசத்தைமேற்கொண்டு சமஸ்தகர்மத்தையும் ஆசரித்துப் பாரணைபண்ணக்கடவன் ஏகாதசி விரதத்தையாவது விட்டுவிட்டபோதிலும் துவாதசிவிரதத்தைவிடாது ஆசரிக்கக்கடவன் இதில்யாதொருசந்தேகமும்வேண்டியதில்லை துவாதசியிலருணோதய சமயத்திலே ஏகாதசிகலாமாத்திரமிருந்தால் முந்தின ஏகாதசியை ஆசரிக்காமல் துவாதசியிலேயே ஏகாதசிவிரதத்தை அநுஷ்டிக்கக்கடவன் இவையெல்லாம் வேதேதிகாசபுராணாகமாதிகளில் கருத்தாகும். ஸ்ரீஹரிதினமாகிய ஏகாதசிவிரதத்தைத் தசமியினன்றே தொடங்கி அன்றிராத்திரிப் போஜனம்பண்ணாமல் துவாதசிசாயங்காலமுதலாகநான்குகாலபோஜனம் பண்ணாமல் தசமியில் ஒருவேளைபோஜனஞ்செய்து ஸ்திரீஸம்போகமில்லாமல் பூமியில் சுத்தமான தரையில் சயனித்தும் இந்தஉபவாசதினத்திலே நெல்லிப்பருப்பைச் சரீரத்தில்பூசிக்கொண்டு ஒருநதியிலேஸ்நானஞ்செய்து உபவாசமிருந்து இராத்திரியிலும் ஸ்ரீசர்வேஸ்வராகியஹரியை ஆராதிக்கக்கடவன் இந்த வைதிகவிரதத்தை யநுஷ்டிக்கின்ற ஸ்ரீவைஷ்ணவனானவன் தசமியேகாதசி துவாதசியாகியமூன்றுதினங்களிலும் பாஷண்டனையும் கர்மஹீனனையும் பதிதனையும் சண்டாளனையும் பாராமலும் சம்பாஷணஞ்செய்யாமலும் இருக்கக்கடவன் பிராமணனாயிருந்தும் ஸ்ரீவிஷ்ணு பக்தியில்லாதவன் பாஷண்டனென்றும் சிகையக்ஞோபவீதங்களை விட்டுவிட்டவன் கர்மஹீனனென்றும் மஹாபாதகம் உபபாதகம் இவைகளைச்செய்கின்றவன் பதிதனென்றும் அல்லியபீஜத்துக்குப் பிறந்தவன் சண்டாளனென்றுஞ் சொல்லப்படுவார்கள்.

வாராய் அம்பிகாதேவீ ஏகாதசியிரவில் ஸ்ரீஹரியைத்திவ்விடவஸ்திராபரணங்களால் அலங்கரித்துச் சுகந்த புஷ்பாதிகளைச்சாத்தித் தூபதீபங்களால் ஆராதித்துப்பக்தியோடு பாரதந்திர ஞானத்தால் வேதகானஞ் செய்துகொண்டே நித்திரையில்லாமல் இராக்காலத்தைக்கழித்து அருணோதயத்துக்குமுன்னே திருத்துழாய்கலந்த பரிசுத்தநீரிலே ஸ்நானஞ்செய்து எதாசாஸ்திரமாகப் பிதிர்தேவதைகளுக்கும் தேவர்களுக்குந் தர்ப்பணத்தைச் செய்து சர்வேஸ்வராகிய ஸ்ரீஹரியையும் பெரியபிராட்டியாரையும் பத்மமாலையைத்தரித்துக் கோமளமாகிய திருத்துழாய்த் தளங்களாலும் புஷ்பங்களாலும் தூபதீபாதிகளாலும் ஆராதிக்கக்கடவன் அந்தஆராதனத்திலே தீபங்கள் நூற்றெட்டாயிருக்கவேண்டும் பசுவினெய்யும் நல்ல சர்க்கரையுஞ்சேர்ந்த பாயச

* கலாஎன்பது ஒருநாழிகையின் சிறியபங்கு.

த்தையும் நானாவிதகனிவர்க்கங்களுங் கர்ப்பூரம் இலவங்கம் சாபத்திரி
சாதிக்காய் முதலியவாசனைத் திரவியங்களோடு அடைகாயமுதுஞ்சம
ர்ப்பித்து நமஸ்காரஞ்செய்து சமிதையினால் அக்கினியை வளர்த்தி
ப்புருஷ சூக்தத்தினாலே பசுவினெய்யையும் ஸ்ரீசூக்தத்தினாலே பாய
சத்தையும் நூற்றெட்டு ஓமம்பண்ணி முடித்துச் சூரியோதயத்துக்கு
முன்னேதானே தீர்த்தமுந் துளசியுஞ் சுவிகரித்து ஸ்ரீவைஷ்ணவர்க
ளுக்குத் ததியாராதனஞ்செய்து பின்னே வாக்குநியமத்தையுடையவ
னாய்த்தானும்பூசித்து அன்றைப் பகற்பொழுதை நித்திரையில்லாம
லேஇதிகாசபுராணங்களால் பகவத் குணானுபவஞ்செய்து போக்கி அ
ன்றிராத்திரியுந் தசமியிற் செய்தாற்போலவே ஸ்திரீசங்கமத்தைவிட்
டுத் தனியேசுசியாய்த் தரையின்மீதுபடுத்து நித்திரிக்கக் கடவன் வா
ராய் பார்வதி துவாதசியில் ஸ்ரீயப்பதியை இப்படி ஆராதிக்கின்றபுரு
ஷசிரேஷ்டனுக்குப் பெரியபிராட்டியாரோடு ஸ்ரீசர்வேஸ்வரரானவர்
சீக்கிரத்தில் பிரசன்னராய்ச் சர்வாபீஷ்டங்களையுங் கொடுப்பரென்று
ஸ்ரீருத்திரபகவான் சொல்லியருளினரென்று சூதபுராணிகர் நைமிசா
ரணிய வாசிகளாகிய சௌநகாதி முனிவர்களுக்குஉபதேசித்தபடியே
வசிஷ்டமஹாமுனிவர் சூரியவம்சராஜனாகிய திலீப சக்கரவர்த்திக்கு
ச் சொல்லியருளினர்.

அனுஷ்டிப்பு முற்றிற்று.

— —*—

## ருக்குமாங்கதஏகாதசி
### சரித்திரம்.

பூபாலசிரேஷ்டனாகிய மருத்த மஹாராஜனானவர் முனிபுங்க
வராகிய வசிஷ்ட மஹாருஷியைப் பிரணாமஞ்செய்து வேதஇதிகாசபு
ராணங்களாலே சொல்லப்பட்ட உபவாசவிரததினங்களுக்குள்ளேசிற
ந்த அரிதினமாகிய ஏகாதசி உபவாசத்தை அனுஷ்டித்து எந்தப் புரு
ஷன் விதிசிவாதிகளுக்கும் மனோவாக்கால் அளவிட்டுச்சொல்லப்படா
த பரமபதத்தை அடைந்தானோ அந்தஉத்தம புருஷனையும் அவன் அ
ரிதினத்தில் உபவாசமிருந்து அனுஷ்டித்த கிரமத்தையும் அடியேனு
க்கு விவரமாய்த் தெரிவித்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தனர் த
ம்மைப் பிரார்த்தியாநின்ற அந்தமருத்தமகாராஜனைப்பார்த்து வசிஷ்
டமுனிவர் சொல்லுகின்றார் வாராய் பாகதோத்தமனே பூர்வத்தில் வித
ர்ப்பதேசராஜனாகிய ருக்குமாங்கதராஜன் சப்பன்னதேசத்து மகுட
வர்த்தனர்களும் தனக்குக்கப்பங்கட்டும்படி மனுமுறை தவறாமல்

செங்கோல்செலுத்தி இந்தப்பூமண்டலத்தை ஆளுகை செய்து கொண்டு ஸ்ரீபகவானுடைய திவ்விய சரணாரவிந்தங்களில் பிரீதி யுடையவனாயிருக்கின்ற காலத்தில் அந்தராஜ ஸ்ரேஷ்டனுடைய நூறும்தேவிமார்களில் நற்குண நற்செய்கைக ளமைந்த பதிவிரதாசிரோமணியாகிய சந்தியாவள்ளென்பவள் ஸ்ரீபகவானுடைய சங்கல்பத்தினால் ஒரு திவ்விய புத்திரரத்தினத்தைப் பெற்றனள் அந்தப்புத்திரனுக்குத்தகுந்தகாலங்களில்சௌளஉபநயனாதிகளும் தர்மாங்கதனென்று நாமகரணமுஞ் செய்து அவனுக்குச் சதுர்வேதங்களையும் இதிகாசங்களையும் அஷ்டாதசபுராணங்களையும் ஆறுசாஸ்திரங்களையும் தனுர்வித்தையையுங்கற்பித்துச் சுகஜீவியாய்வாழ்ந்து கொண்டிருந்தனன். இவனிப்படியிருக்க ஒருமஹாருஷியானவர் தாம்தபசு செய்வதற்கேற்ற இடத்தைத்தேடிக்கொண்டு வருமளவில் ருக்குமாங்கதமகாராஜன் தன்னுடைய பட்டமஹிஷிகள் நானாவிதசுகந்த புஷ்பங்களைப்பறித்து அலங்காரஞ் செய்து கொள்வதினிமித்தம் அமைத்திருக்கின்ற உத்தியானவனத்தைக்கண்டு அதில் சந்தனம்அகில் சண்பகம்கொங்கு காயாகுங்குமம்பாதிரிகுருக்கத்தி சுரபுன்னைநாரத்தை செருந்திகமுகு கூந்தற்கமுகு பலாதேமா அரசுவாழை அசோகு மகிழ்முதலிய விருட்சங்களும்துளசிஇருவேலி இருவாட்சி மல்லிகைமுல்லை அலரிமருக்கொழுந்து முதலிய புஷ்பச் செடிகளும் பலவிதபூங்கொடிகளும் அடர்ந்துஇருண்டு குளிர்ந்தநிழலைச்செய்து கொண்டிருப்பதையும் தாமரை அல்லிகுவளைகள் மலர்ந்திருக்கிற தடாகங்களையும்பார்த்து அதிசயித்து இதுவேநாம்தபசு செய்வதற்கு யோக்கியமானவிடமென்று மகிழ்ந்து உள்ளேபிரவேசித்து ஓரிடத்தில் பன்னசாலைசெய்து தபசில்இருந்துவிட்டனர் அந்தவனத்தைக்காப்பவர்களும் இந்தமஹாருஷியானவர் வனத்துக்குள்ளே பிரவேசிப்பதைக்குறித்து யாதொருதடையுஞ்செய்யாமல் அதிபயபக்தியோடு அவருக்குஉபசாரஞ்செய்து கொண்டுவந்தார்கள் வாராய்மார்த்தாண்ட குலேசனாகிய மருத்தமகாராஜனே ருக்குமாங்கத மகாராஜனுடைய சிங்காரவனத்தில் இந்தமகாருஷியானவர்தவம்பண்ணிக்கொண்டிருக்குங் காலத்திலே பிரமருத்திரேந்திராதி சமஸ்ததேவர்களுந்தங்கள்தங்கள் இஷ்டசித்திநிறைவேறும்படி ஸ்ரீஹரியைஆராதிக்கின்ற திருவாராதனைக்கு வேண்டியநானாவித திவ்வியபரிமளபுஷ்பங்களைப் பூலோகத்தில்வந்து அங்கங்குள்ள புண்ணிய நந்தவனங்களில் பறித்துக் கொண்டு போகாநின்ற சிலதேவதாஸ்திரீகள் ஒருநாள்இந்தச் சிங்காரவனத்தைக்கண்டு இதில் ஸ்ரீசர்வேஸ்வராகிய ஸ்ரீபரந்தாமனை அர்ச்சிப்பதற்கு யோக்கியமானபுஷ்பங்கள் போதுமானமட்டும்இருக்கின்றபடி

யால்நாம்வேறிடங்களைத்தேடிச் செல்வானேனென்றுதங்களுக்குள்ளே பேசிக்கொண்டு ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ்செய்து போதாயிருக்கின்ற மலர்களைத்தினந்தோறும் வந்துவேண்டியமட்டும் எடுத்துக்கொண்டுபோவார்கள் இவ்வாறு அப்சரஸ்திரீகள் எடுத்துக்கொண்டுபோவதினாலேதாங்கள் அலங்காரஞ்செய்துகொள்வதற்குப் போதுமானமலர்கள் அரண்மனைக்குச் சிலநாள்களாய்வருகிறதில்லையென்று ருக்மாங்கதமகாராஜருடைய பட்டமஹிஷியாகிய சந்தியாவளிதேவிமுதலிய நூறுபேர்களும் தங்கள் இஷ்டநாயகனுக்குத் தெரிவித்தார்கள் அந்தராஜேந்திரனாகிய ருக்மாங்கதமகாராஜன் உத்தியானவனத்தைக் காக்கின்றவர்களையும் போஷிக்கின்றவர்களையும் அழைத்துச் சில நாள்களாகப் புஷ்பங்கள்குறைவதற்குக் காரணமென்னவென்றுகேட்க அதற்குஅந்தஏவலாளிகள் அஞ்சலிபந்தஞ்செய்துகொண்டுராஜமார்த்தாண்டனே பூமண்டலாதிபனே தேவரீருடைய கட்டளையின்படி நாங்கள்உத்தியானவனத்தைக் காவல்செய்வதிலும் போஷிப்பதிலும் யாதொருகுறைவுமில்லை தினமானம்சாயங்காலத்தில் எவ்வளவுநாளரும்புகளைக்காண்கின்றோமோ அவ்வளவுமலர்களை மறுநாளுதயத்தில் காண்கிறதில்லை வேறொருவருடைய பாதச்சுவடுகளையும் அவ்விடத்திற்காணோம் ஆயினும் இனி இரண்டொருநாள்களுக்குள்ளே அந்தச்சோரர்களைப் பிடித்துக்கொண்டுவந்து தேவரீருடையசமூகத்தில் விடுகிறோமென்றுமகாராஜனிடத்தில் செலவுபெற்றுக்கொண்டுவந்து அந்தவனத்தில்இரவும்பகலுமாக நித்திரையில்லாமல் காத்திருந்தும் தேவதாஸ்திரீகள்வருவதும்புஷ்பங்களைஎடுத்துக்கொண்டுபோவதும் தங்கள்கண்களுக்குத்தோற்றுமையால் இனிநம்மாலாவதென்ன நாம்அதிஜாக்கிரதையாகக் காத்திருந்த இந்தநாள்களிலும் வழக்கப்படிபுஷ்பங்கள் குறைகின்றதேஇதற்குநாமென்ன செய்யப்போகிறோமென்று அந்தவனத்து ஏவலாளிகள் தங்களுக்குள்ளே அதிகவிசாரத்தை யுடையவர்களா யிருக்கும்போது அவர்களில் ஒருவன்சொல்லுகின்றான்.

வாருங்கோள் சகோதரர்களே தபோநிஷ்டைகளை யனுஷ்டிக்கிறவர்கள் கந்தமூலம் சருகுஜலம்வாயுமுதலானதுகளைப் பக்ஷிப்பார்களென்று பெரியோர்கள்சொல்லக்கேள்விப்பட்டிருக்கிறோமன்றோ ஆகையால்இந்தவனத்தில் தவத்தைப்பூண்டிருக்கும் மகாருஷியே தமக்குப்பக்ஷணையாகப் பூக்களைப்பறித்துப் புசிக்கிறதாகஎனக்குத் தோன்றுகிறதென்று சொன்னான் மற்றொருவன்சொல்லுகிறான் ஆம்அதற்குச் சந்தேகமில்லை அந்நியர்உள்ளேபிரவேசிக்கவும் நாம்கண்டதில்லை அவர்களுடைய காலடியும்பூமியிற்காணோம் ஆதலால்நீசொன்னதே நல்ல

அபிப்பிராயமென்றுஅவர்களெல்லோரும்பேசிக்கொண்டு அந்தமஹா ருஷியினுடைய சமீபத்திலேபோய் ஐயா உம்மை எங்களுடைய அரசன் அழைத்துவரச்சொன்னாரென்று தண்டகாரமாகப் பிரணாமஞ்செய்து இனிய வசனங்களைச்சொல்லி ருக்குமாங்கத மகாராஜனுக்கு முன்னே அழைத்துக்கொண்டு போய்விட்டார்கள். அந்தச் சற்குண விவேக சீலனாகிய மகாராஜன் தலையில் பவளக்கொடிகள்போன்றஜடா மகுடமும் ஆகார நித்திராதிகளை ஒழித்து இளைத்து மெலிந் திருக்கின்ற மேனியில் பன்னிரண்டு திருமட் குறியும் கையிற் செப மாலையும் உடையவராய் ஸ்ரீராமதாரகமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு ஸ்ரீசங்கரபகவானைப்போல் விளங்குகின்ற மஹாருஷியைக் கண்டமாத்திரத்தில் சிங்காதனத்தை விட்டிறங்கிச் சாஷ்டாங்கமாகத் தண்டன்சமர்ப்பித்து வாரீர்என்னை ஆளவந்த அருந்தெய்வமே என்றுசொல்லி அர்க்கியபாத்தியங்களைச் செய்து ஒரு திவ்யரத்தினகசிதமான ஆசனத்தில்எழுந்தருளச்செய்து அஞ்சலிபந்தஞ்செய்துகொண்டுநின்றான்.

அப்போது முனிசிரேஷ்டரானவர் அந்தமஹாராஜனைப்பார்த்து வாராய் நரேந்திரனே நீர்என்னை அழைத்துவரச்சொன்னகாரியமா தென்று வினவினார் வினவவே மகாராஜன் நாமொன்று மறியோமே இதென்னவிபரீதமென்று திடுக்கிட்டுப்பயந்து அந்த வனப்பரிசார ர்களைப்பார்த்தனன் அதறிந்து உங்கள் ஐயனே எம்முடைய உத்தி னவனத்தில் வேறொருவர்பிரவேசிக்க நாங்கள்கண்டதில்லை இந்தமஹா ருஷி ஒருவர்மாத்திரந்தான் இரண்டொருமாதமாக அந்தவனத்தில்வசிக்கின்றார் ஆதலால் இவர்மேல் எங்களுக்குச் சந்தேகந்தோன்றியபடியால் அழைத்துக்கொண்டு வந்தோமென்று நடுங்கிச்சொன்னார்கள் சொன்னமாத்திரத்தில் கண்கள் சிவந்து அதிககோபங்கொண்டு அவர்களைப்பார்த்து அதட்டி மூடமதிகளே உலகஆசையை வெறுத்துத் தபவேஷம்பூண்டு அதிகபரிசுத்தராய் விளங்குகின்ற முனிவர்களையோ அல்பவஸ்துவாகிய புஷ்பங்களை அபகரிப்பவர்களெனச் சந்தேகிக்கிறதென்றுசொல்லி அந்தமுனிபுங்கவருடைய பாதங்களில்விழுந்துசேவித்து ஸ்ரீஹரியினுடைய சரணாரவிந்த தியானநிஷ்டரோ ஆ[illegible]யனேயும் தம்முடையவிஷயத்தில் அபசாரப்பட்ட இந்த மூடஜனங்களையும் அருள்கூர்ந்து ரக்ஷிக்கடவீரென்று பலகால்விழுந்துவிழுந்து சேவிக்கின்றகுணசீலனாகிய ருக்குமாங்கதனைப்பார்த்து வாராய் பூபாலகோத்தமனே உம்முடைய சிங்காரவனத்தில் புஷ்பங்கள் குறைந்து

போவதற்குக் காரணத்தை நான் வெளியிடுகிறேன் கேளுமென்று சொல்லுகின்றார்.

தினந்தோறும் ஸ்ரீபகவானைத் தேவர்கள் அர்ச்சிப்பதற்குச் சூரியோதயமாகச் சாமப்பொழுதிருப்பதற்குமுன்னே உம்முடைய நந்தவனத்தில் சிலதேவதாஸ்திரிகள்வந்து வேண்டியமலர்களை யெடுத்துக்கொண்டு போகிறபடியால் புஷ்பங்குறைகின்றது அவர்களைக்கையுமெய்யுமா யறியவேண்டுமோனால் அந்தநந்தவனத்திலே சிலவிடங்களில் கொம்மட்டிவிதைகளை விதைத்துப் பயிர்செய்தால் அந்தஅசுத்தமாகிய கொடிகள் அந்தஅப்சாஸ்திரிகளுடைய பாதங்களிலாவது பட்டாற்போதும் அதனால் அசுத்தமடைந்து ககனமார்க்கத்தில் போகமாட்டாதவர்களாய் நின்றுவிடுவார்கள் அதுசமயத்திலே அவர்களைப் பார்க்கக்கூடுமென்று அவர்களைக்காணக்கூடியஉபாயத்தையும்எடுத்துக்காட்டி அந்தச்சபையிலிருந்த ராஜர்களும் பிராமணோத்தமர்களும் மற்றவர்களும் வணங்கும்படி எழுந்திருந்து ருக்குமாங்கத மகாராஜனுக்கு ஆசீர்வசனங்களைச் சொல்லித் தம்முடைய ஆச்சிரமத்திற்குப் போயினர்.

உடனே அந்தமஹாருஷியானவர் சொல்லியருளியபடியே ருக்குமாங்கதமகாராஜன் வனத்துத் தொழிலாளிகளுக்குக் கட்டளையிட அவர்கள் அப்படியே அந்தவனப்பிரதேசத்தில் சிலசிலவிடங்களில் கொம்மட்டிவிதைகளை விதைத்தனர்கள் அவைநன்றாய்ப் பயிராகி வனமெங்குமுள்ள மரங்களிலும் பூஞ்செடிகளும் பூங்கொடிகளிலும் படர்ந்திருந்தபடியால் வழக்கப்படியேவந்து புஷ்பங்களைப் பறிக்கின்றஅந்தத் தேவதாஸ்திரிகளில் ஒருதெய்வப்பெண்ணினுடைய பாதங்களில் அந்தக்கொடிபட்டு அசுத்தையாய்விட்டனள் மற்ற அபசாஸ்திரீகள். ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ்செய்து திவ்விய பரிமளபுஷ்பங்களை எடுத்துக்கொண்டுபோகாநிற்க அவர்களைக்கூவிக் கொம்மட்டிக்கொடிகாலில் தீண்டியபடியால் நான் அசுத்தையாய்விட்டேன் ஆகையால்இப்போது நான்வரக்கூடாது நீங்கள்யாவரும் ஸ்ரீஹரிபூஜைவேளை தவறாமல் போய் வாருங்களென்றுசொல்லி நின்றுவிட்டனள் அங்கிருந்து இச்செய்திகளைப் பார்த்திருந்த மகாருஷியானவர் அந்தவனத்துத் தொழிலாளனொருவனையழைத்து ருக்குமாங்கத மகாராஜன் சீக்கிரமாய் நம்மிடத்தில் வரும்படிச் சொல்லியனுப்பினர் அவனப்படியே அரசனுக்குத் தெரிவித்தமாத்திரத்தில் மகாராஜன்புறப்பட்டுச்சீக்கிரத்திலே அந்தமுனிபுங்கவருடைய ஆச்சிரமத்திற்குவந்து தண்டன் சமர்ப்பித்

தான் வத்தமகாராஜனை ஏகாந்தமாய் அழைத்துக் கொண்டுபோய் அசுத்தையாய்நிற்கின்ற தெய்வப்பெண்ணைக் காட்டினர் அந்தமகாராஜன் அசுத்தையாகிய தேவதாஸ்திரீ சமீபத்திலேபோய்ச் சாஷ்டாங்கமாகப் பிரணாமஞ்செய்து நின்றனன் அந்தத் தெய்வப்பெண் மகாராஜனைப்பார்த்துச் சொல்லுகின்றாள்.

வாராய் ஸ்ரீபகவத் கைங்கரிய தூரந்தரசீலனே உன்னுடையபுண்ணியவனத்தில் நானும் சிலதேவதாஸ்திரீகளும் சிலநாளாகவந்து திவ்வியபுஷ்பங்களை எடுத்துக்கொண்டு ஸ்ரீஹரியைத் திருவாராதனஞ்செய்கின்ற விஷ்ணுவாதி தேவர்களுக்குக்கொடுப்போம் இன்றையத்தினம் உன்னுடையவனத்தில் படர்ந்திருக்கின்ற கொம்மட்டிக்கொடி என்காலில்பட்டுத் தீட்டுப்பட்டேன் ஆதலால் நான்மாத்திரம் நின்றுவிட்டேன் மற்றத் தேவதாஸ்திரீகள் போய்விட்டார்கள் தேவர்களாகிய நாங்கள் பூலோகத்தில் பரமருஷிகளுடைய கண்களுக்கல்லாமல் மற்றச் சாதாரண ஜனங்களுடைய நேத்திரங்களுக்குக் காணப்படமாட்டோம் உன்னுடைய நந்தவனத்துப் புஷ்பங்கள் ஸ்ரீஹரிபூசைக்கு உபயோகமாகின்ற மகாபுண்ணிய வசத்தினலாக்கும் உன்னுடைய திருஷ்டிக்கு நான்தோன்றினேன் வாராய்சந்திரகுலோத்தமனே நாங்கள் பூக்கொய்யும்போது ஸ்ரீஹரிநாம சங்கீர்த்தனஞ்செய்கிறதுண்டு இன்றைத்தினம் நான்விஷ்பாத்திரத்தில் மனதைச்செலுத்தினவளாய் ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்யமறந்து புஷ்பங்களைப்பறித்தேன் அந்தத்தோஷத்தினலன்றோ நானுந்தீட்டுப்பட்டுக் ககனசஞ்சாரஞ்செய்யக் கூடாமையாயிற்று புஷ்பங்களும் ஸ்ரீசர்வேஸ்வரராகிய ஸ்ரீஹரியினுடைய பாதகமலங்களுக்கு உதவாமற் போய்விட்டது. வாராய் உதாரகுணசீலனே என்னைப்பரிசுத்தஞ் செய்ய உனக்கு இஷ்டமிருந்தால் ஏகாதசிவிரதபலத்தை எனக்குத்தத்தஞ்செய்யக்கடவாயென்று கேட்கின்ற தெய்வப்பெண்ணைநோக்கி ருக்குமாங்கதமகாராசன்சொல்லுகிறான். வாராய்ஸ்ரீஹரிகைங்கரிய சுகுணவதியே ஏகாதசிவிரதம் இப்படிப்பட்டதென்று ஒருநாளுங் கேட்டறியாதபேதையாகியநான் அந்த விரதபலத்தை எங்கேயிருந்துகொடுக்கப்போகிறேனென்று சொல்ல அதற்கு அப்சரஸ்திரீசொல்லுகிறாள் வாராய் சத்தியவிரதபூபாலகனே உனக்கு ஒன்றுந்தெரிய மாட்டாதென் பதுநிஜமே உன்னுடைய பட்டமஹிஷிகளில் உத்தமநாயகியாகிய சந்திராவளிதேவி தனக்கு அறுசுவைஉண்டிகளைச் சமைக்கின்றவர்களில் ஒருபோனகத்தியானவள் பாகஞ்செய்தகறிகளின் தோஷங்கண்டு அவளைத் தண்டனைசெய்து காவலில்வைக்க அந்தவெள்ளாட்டியானவள்

அன்று ஒருவேளைபோசனத்தோடிருந்து மறுநாள்முழுமையும் போசனமில்லாமையாலும் துக்கத்தினாலும் அன்றிராமுழுதும் நித்திரையுமில்லாதிருந்தனள். மூன்றுநாளுதயத்தில் தன்வெள்ளாட்டிமேல் கருணைவந்து சந்தியாவளிதேவியானவள் அவளைஸ்நானம்பண்ணிப் போசனஞ்செய்யக் கட்டளையிட்டனள். அப்படியேபோனகத்தியானவள் நீராடிப் போசனஞ்செய்து சிறையிலிருந்தவள் நாலாநாள்சிறைவிடுபட்டுத் தன்போனகத்தொழிலிலமர்ந்தனள். அந்த மூன்றுநாள்களில் ஒருவேளை போசனத்தோடிருந்த முதல்நாள் தசமியாகவும் ஒருவேளைபோசனமுந் துக்கத்தினால் - நித்திரையுமில்லாமலிருந்த இரண்டாநாள் ஏகாதசியாகவும் உதயத்திலேநீராடி ஒருவேளைபோசனத்தோடிருந்த மூன்றுநாள் துவாதசியாகவும் அந்தவெள்ளாட்டி அனந்தகோடிஜன்மங்களிலே செய்தபுண்ணியவசத்தால் நேரிட்டமகாபலனை யடைந்திருக்கின்றனள் அவளைக்கொண்டு அந்தப்பலனை எனக்குத் தத்தஞ்செய்விப்பாயேயானால் உனக்கு அதிகசுகிர்தமுண்டென்று சொல்லினள்.

உடனே மகாராசன் அரண்மனைக்குவந்து தன்ஆசைமனையாட்டியாகிய சந்தியாவளிதேவியினால் அந்தவெள்ளாட்டி யின்னாளென்றறிந்து அழைத்துக்கொண்டுபோய் அவளறியாமலே யனுஷ்டித்தஹரிதினமாகிய ஏகாதசிமகாபுண்ணியபலனைத் தெய்வப்பெண்ணுக்குத் தத்தஞ்செய்யும்படிக் கட்டளையிட்டனன் தன் அரசன்கட்டளையிட்ட படியே போனகத்தியானவள் ஸ்ரீபகவானுடைய நிர்ஹேதுகடாக்ஷத்தாலேபெற்ற ஏகாதசிவிரதபலனை அப்சரஸ்திரீக்குத் தாரைவார்த்துத் தத்தஞ்செய்தனள் தத்தஞ்செய்தமாத்திரத்தில் அந்தத்தேவதாஸ்திரி அதிபரிசுத்தத்தையடைந்து ககனமார்க்கத்தில்போகின்றவள் ருக்குமாங்கத மகாராசனைப்பார்த்து வாராய்மகோபகாரியாகியசந்திர வமிசநரபாலனே ஏகாதசியுபவாசவரலாற்றைச் சொல்லுகிறேன் கேட்கக்கடவாய். பூருவத்திலே துருவாசமகாருஷியானவர் தம்முடைய விஷயத்தில் அபசாரப்பட்ட இந்திரபகவானுக்கிட்ட சபாத்தினால் பிரமருத்திரேந்திராதி சமஸ்தபிராணிகளுக்குந் தாயாகிய ஸ்ரீமஹாலட்சுமி அந்தர்த்தானமாயினள் அதனால்சதுர்முகன் சிவன்முதலாகிய ஆத்துமகோடிகள் அதிகதுக்கத்தை யனுபவித்துயாதொருசெயலுமில்லாமல் ஸ்ரீபகவானுடைய அருளைப்பெற்று ஸ்ரீமஹாலட்சுமியினுடைய திவ்யாவதாரத்தைக்குறித்துப் பிரமருத்திராதிதேவர்களும் தானவர்களும் ஆகாரநித்திராதிகளையொழித்து ஏகாதசிமுழுமையும் விரதமிருந்து மந்தரமலையால் திருப்பாற்கடலைக் கடையாநிற்கையில் மறுநாள் துவாதசிசூரியோ

தயத்துக்குமுன் ஸ்ரீமஹாலக்ஷ்மி திருவவதரித்தனள் அந்த அகிலலோ கைகவர்மைய ஸ்ரீபகவானுக்குத் திருமணஞ்செய்து பூமியில்விழுந்து சேவித்துக் கொந்த ஸ்ரீபாதாரவிந்த கங்காதகத்தையும் தாங்கள் திருவடியிலேயர்ச்சித்த திருத்துழாயையும் உண்டு ஏவப்புசகலதேவர்களும் அமிர்தபானம் பண்ணினர்கள் ஸ்ரீபகவானுடைய கட்டளையினாலே அதுமுதல் பிரமருத்திராதிகளும் பூஜாரிகளும் இந்தவிரதத்தை அனுஷ்டிக்கிறார்கள் இந்த உபவாசவிரதத்தை ஸ்ரீஹரியினுடைய கட்டளையைமீறினவர்களாகிறார்கள் அவர்கள் நரகமடைவதற்குச் சந்தேகமில்லை.

ஆகையால் சந்திரகுலபுத்திரனே நீ தசமியில் தீர்த்தமாடிப் பன்னிரண்டு உணர்த்துவபண்டாரந்தரித்து ஒருவேளை அன்னத்தைப்புசித்து நித்தொடக்கஞ்செய்து ஏகாதசியினுந்தீர்த்தமாடித் திருமண்தரித்துத்திருத்துழாயுதகமுண்டு ஆகாரதித்தியாதிகளை ஒழித்து ஸ்ரீஹரியினுடையகுணானுபவஞ்செய்து மறுநாள் துவாதசியில் சூரியோதயத்துக்குமுன் தீர்த்தமாடிப்பன்னிரண்டு திருமட்குறிகளையுமணிந்துகொண்டு ஸ்ரீதுளசியாலும் திவ்யபரிமளகந்தபுஷ்பங்களாலும் ஸ்ரீஹரியையாராதித்துத்துளசிதீர்த்தமுண்டு ஸ்ரீபாகவதோத்தமராகிய ஒரு அதிதியையழைத்துவந்து அவரோடுதிவ்யான்னத்தைப்புசிக்கக்கடவாய். ஸ்ரீபரந்தாமருக்குஆராதித்தசேஷமாகிய கந்தபுஷ்பங்களைத்தரித்து ஸ்ரீஹரிநாமசங்கீர்த்தனஞ் செய்துகொண்டு அவருடைய ஆலயங்களிலாவது காலக்ஷேபகூடங்களிலாவதுபோயிருந்து நித்திரையில்லாமலே அன்றுபகற்பொழுதையும்போக்கி இராத்திரிக்குமுணவில்லாமலிருந்து இவ்வாறுவிரதராஜமாகிய ஏகாதசிவிரதத்தை அனுஷ்டிக்கக்கடவாய் இதுதான் என்னால் உனக்குச்செய்யத்தக்கபிரியகாரமென்றுசொல்லித் தெய்வப்பெண்கனமார்க்கத்திலே போய்விட்டனள். பிற்பாடு ருக்குமாங்கதமகாராஜன் அந்தநந்தவனத்திலிருந்துகொம்மட்டிக்கொடிகளொன்றுமில்லாமல்வெட்டிப்பறித்தெறிந்துவிட்டு இனிஇதில் அரண்மனைக்குப்புஷ்பங்கள் எடுக்கவேண்டியதில்லை இந்தப்பூஞ்சோலை அப்சரஸ்திரீகள் புஷ்பம்பறிப்பதற்கே உபயோகமாகக்கடவது. வேறொருநந்தவனத்தை ஏற்படுத்தி இதிலுண்டாகிறபுஷ்பங்கள் நம்முடைய அரண்மனைப்பெண்களுக்கு உபயோகமாகக்கடவன வென்றுவனத்தைக்காப்பவர்களுக்குக் கண்டிப்பாய் உத்திரவுசெய்து சபாமண்டபத்தையடைந்து சிம்மாசனத்தினமெல்லார்- தன்னுடையமந்திரிமார்களுக்கும் அரசவையினிருந்தகற்றுவல்லபெரியோர்களுக்கும்சாங்கோபாங்கமாகத்தெரிவித்து அந்தத்தெய்வப்பெண் தன்னை ஏகாதசி விரதத்தை யனுஷ்டிக்கும் படிச்

சொன்னத்தையுஞ் சொல்லினன் அதுகேட்டமந்திரிமுதலானவர்களும்சாஸ்திரவிசாரணை விற்பன்னர்களும் அதிக ஆநந்த பரவசர்களாய்ச் சொல்லுகிறார்கள்.

வாராய் ருக்குமாங்கதமகாராஜனே ஸ்ரீபகவானுடைய நிரேதுகஜாயமான கடாக்ஷத்தினால் எந்தமகாவிரதம் தெய்வப்பெண்ணால்உமக்குஉபதேசிக்கப்பட்டதோ அந்தஏகாதசி மகாவிரதத்தை யநுஷ்டிக்கின்றவர்கள் ஜாதியில் சண்டாளர்களாயினும் அந்தஉத்தமபுருஷர்கள்இம்மையில் தங்களிஷ்டகாமியங்களையடைந்து மறுமையில்ஸ்ரீவேதபுருஷனுக்கும் வித்வான்களுக்கும் மனோவாக்குகளால் நினைப்பதற்குஞ் சொல்வதற்குந் அல்பமாகிய நிரதிசயாநந்தபரமபதத்தை யடைவார்கள். இதுவேதசாஸ்திரங்களால் கூறப்பட்ட பரமார்த்தமாகும்ஆகையால் இவ்விரதசிரேஷ்டத்தை ஆவசிகமாய் நீர்அநுஷ்டிக்கவேண்டுமென்று அங்குள்ள வேதஇதிகாசபுராணாதிகளை நன்றாய்ப்பரிசீலனஞ் செய்திருக்கின்ற பெரியோர்கள் யாவருஞ்சொன்னார்கள் அப்படிச்சொன்னபெரியோர்களைப்பார்த்து ருக்குமாங்கதமகாராஜன்சொல்லுகிறான் வாருங்கோள் வைதிகநிஷ்டானுபவமகானுபாவர்களே தன்குடையின்கீழிருக்குங்குடிகளை வர்ணாச்சிரமந்தவறவொட்டாமல் அவரவர்களுக்குரிய ஜாதிகர்மங்களையநுஷ்டிக்கச்செய்து சன்மார்க்கத்திலேநடத்துவதன்றோ ராஜதர்மம்ஆகையால் என்ஆஞ்ஞையின்கீழிருக்கும் சகலதேசத்தார்களையும் இந்தவிரதத்தை அநுஷ்டிக்கச்செய்யவேண்டுமென்று எனக்கு இஷ்டமிருக்கிறதென்றுசொல்ல அங்குள்ளயாவரும்ருக்குமாங்கதமகாராஜனுடைய விவேககுணத்தையும் தன்குடிகளிடத்தில்வைத்திருக்கும் ஜீவகாருண்ணியத்தையுங்குறித்து அவனைப்பலவாறாகமெச்சிக்கொண்டாடி அப்படிச்செய்வது உத்தமமென்றுஒத்துக்கொண்டார்கள் உடனேதனக்குக் கப்பங்கட்டிக்கொண்டுவருகின்ற சப்பன்னதேசத்து ராஜர்களும்அவர்களுடைய குடிகளும்பூர்வபட்ச அமரபட்சங்களில்வருகின்ற ஒவ்வொருஏகாதசி மகாவிரதத்தையும் அநுஷ்டிக்கும்படி அந்தந்தராஜர்களுக்குத் திருமுகமனுப்பித்துத் தன்தேசமெங்குமுள்ள குடிகள்யாவரும் இவ்விரதத்தை அநுஷ்டிக்கக்கட்டளையிடும்படித் தன்முக்கியமந்திரியாகிய சுமந்திரனுக்குஉத்திரவுசெய்தனன் அந்தச்சுமந்திரன் யானையேறும்பெரும்பறையனை அழைத்துஎட்டுவயதுக்குமேற்பட்ட சிறுவர்களும் ஸ்திரீகளும்புருஷர்களும் இந்தஏகாதசிவிரதத்தை அநுஷ்டிக்கும்படி நகரநாடுகளெங்கும் பறைசாற்றக்கட்டளையிட்டனன் அந்தவள்ளுவன் யானையின்மேற்போய் நகரநாடுகளெங்குந்திரிந்து பறைகொட்டி ஓபுரஜனங்களே கேளுங்கோள் எட்டுவய

துக்குமேற்பட்ட புருஷர்களும் ஸ்திரீகளுமாகச் சாது வர்ணத்தார்களும் ஒவ்வொருபட்சத்திலும் வருகின்றதசமியில் பரிசுத்தநீராடிப் பன்னிரண்டு ஊர்த்துவபுண்டரந்தரித்துத் தொடக்கஞ்செய்துஏகாதசியில் அவ்வாறேநீராடித் திருமணிட்டுக்கொண்டு திருத்துழாயுதகமுண்டு அன்றுமுழுமையும் ஆகாரநித்திராதிகளைஒழித்துஸ்ரீபகவத்குணாநுபவஞ்செய்து பொழுதுபோக்கித் துவாதசியில்ஸூர்யோதயத்துக்குமுன்னே தீர்த்தமாடி ஸ்ரீசர்வேஸ்வரனுடைய துவாசநாமங்களையுச்சரித்துத் திருமண்காப்புதரித்துக்கந்தபுஷ்பதூபதீபங்களால்ஸ்ரீஹரியை ஆராதித்து நாநாவிதமதுரபலவர்க்காதிகளை நிவேதனஞ்செய்து திருத்துழாய்த் தீர்த்தஞ்சுவிகரித்துஸ்ரீபரந்தாமருடைய உபயசரணாரவிந்தங்களிலேயே பக்திசிரத்தையுள்ள பாகவதராகியஒருஅதிதியைஉபசரித்து அவரோடுகூட அன்னத்தைப்புசித்து ஸ்ரீபகவத்சேஷமாகிய கந்தபுஷ்பாதிகளைத்தரித்துக்கொண்டு அன்றுபகலும் ஏகாதசி இராப்பொழுதிலிருந்தாற்போலவே நித்திரையில்லாமல் ஸ்ரீஹரியினுடையகோயில்களிலும்அவருடைய அநந்தகலியாணகுணாநுபவங்களைச்செய்யாநின்ற இடங்களிலும் வாசமாயிருக்கக்கடவீர்கள் வாருங்கோள்புரஜனங்களே இதுபூமண்டலேஸ்வரராகிய ருக்குமாங்கத மகாராஜருடைய கட்டளையென்று சொல்லிப் பறைசாற்றினன் அதுகேட்டு விருத்தர்களும் புருஷர்களும் அவரவர்கள் குலஸ்திரீகளும் பாலர்களும்ஆநந்தபரவசர்களாய்த் தங்களுடையமகாராஜனை நாநாவிதமாகப்புகழ்ந்து கொண்டாடி அதிகபக்திசிரத்தையோடுவிரதராஜமாகிய ஏகாதசியையும் அதன் அங்கமாகிய தசமிதுவாதசிகளையும் சாஸ்திரவிதிப்படிவிரதமனுஷ்டித்தனர்கள் ருக்குமாங்கதமகாராஜனும் அவனுடைய நூறு தேவிமார்களும் புத்திரனாகிய தர்மாங்கதனும் மந்திரிசாமந்தர்களும் தன்அரண்மனையிலுள்ள சமஸ்தபரிசாரர்களும்தானும் தர்மம்அர்த்தம் காமம் மோட்சம்என்னும் சதுர்வித புருஷார்த்தங்களுக்கும்சாதனமாகிய இந்தவிரதத்தை அநுஷ்டித்துக்கொண்டுவந்தார்கள் இப்படிஒவ்வொரு ஏகாதசிக்கும் முன்னே நவமிதிதியிலே ருக்குமாங்கத மகாராஜனுடைய கட்டளையால் நாடுநகரங்களெங்கும் பறைசாற்றிவனொருவன் தெரிவித்துக்கொண்டுவருவான்.

## வசிஷ்டர்வாக்கியம்.

வாராய் சூரியவம்சோத்தாரண நரபாலனாகிய மருத்தமகாராஜனேஇப்படி ஏகாதசிவிரதமானது சகலதேசங்களிலும் வியாபித்துவிடவே அங்கங்கு இந்தஹரிதின உபவாசத்தைச் செய்கின்றயாவரும்இ

ம்மையில் இஷ்டகாமியங்களைக் குறைவற அடைந்து சுகஜீவியாய் வெகுகாலம் புத்திரகளத்திராதி பந்துஜனங்களோடு வாழ்ந்திருந்து மறுமையில் நிரதிசயானந்த ஸ்ரீவைகுந்தத்தையடைந்துகொண்டிருந்தார்கள் இந்தப்பிரகாரம் பூலோகமனுஷியர்கள் ஸ்ரீபரமபதத்தை அடைந்துகொண்டு வருவதினாலே பஞ்சமா பாதகங்கள் முதலான பாபங்களைச் செய்கின்றவர்கள் காலபாசத்தால்கட்டுண்டு யாதனாசரீரத்தைப் பெற்று நித்திய துக்கத்தையே அனுபவித்துக்கொண்டு வசிக்கும்ரௌரவாதி நரகங்கள் பாழாகித் தூறுகள்பாய்ந்தன இதைக்கண்டு யமதர்மராஜன்அதி ஆச்சரியத்தையடைந்து மகிஷவாகனாரோகணஞ்செய்துகாலபாசமுங் காலதண்டமுங்கையில் தாங்கிக்கொண்டு ஸ்ரீகயிலாசத்தையடைந்து தேவர்கள் கின்னரர்கள் யக்ஷர்கள் தானவர்கள் ரிஷிசமூகங்கள் சேவித்துநிற்கக் கண்களின்பார்வை நாசிமுனையிற்பாய ராமதாரக மந்திரத்தை வாயில்உச்சரித்துக்கொண்டு கையில் ஜபமாலையிலங்கும்படி ஆலமரநிழலில்பரப்பிரமாநந்தத்தை யனுபவித்துக்கொண்டு சுகாசீனராயெழுந்தருளியிருக்கும் லோகேஸ்வரராகிய ஸ்ரீபரமசிவமூர்த்தியைக் கண்களிக்கக்கண்டு தண்டாகாரமாகப். பிரணாமஞ்செய்து முறையிடுகின்றான்.

வாராய் ஸ்ரீசங்கரபகவானே முன்னால் திருப்பாற்கடலிற்பிறந்த காளகூடவிஷத்தை ஸ்ரீபகவந்நாமங்களும் நாமத்தியானத்தையுச்சரித்துக்கொண்டு கருடபகவானுடைய தியானத்தாலே பானஞ்செய்து எங்களெல்லோரையும் ரக்ஷித்த மகாநுபாவா எனக்குங்காலதூதர்களுக்கும் யாதொருசெயலுமில்லாமல் நரகங்களும் பாழாகி என்னுடையநகரமும் விநாசத்தை யடைந்ததென்று முறையிடுகின்ற யமதர்மராஜனைப்பார்த்து என்னால்செய்யத்தக்க தொன்றுமில்லை வாராய் எமனேயென்று அழைத்துக்கொண்டுபோய் மேருமலைசிகரத்தில் ரத்தினகசிதமாகிய மண்டபத்தி லெழுந்தருளியிருக்கின்ற சதுர்முகனை வணங்கிச்சேவித்து யமலோகம் பாழடைந்திருக்குஞ்செய்தியை விண்ணப்பஞ்செய்தனர் அதற்கந்தப் பிரமதேவன் புன்சிரிப்புகொண்டு வாராய்சங்கரனே வாராய் யமதர்மராஜனே பூர்வத்தில் ஸ்ரீமஹாலட்சுமியின் திருவவதார நிமித்தமாகப் பாற்கடலைக்கடந்த நாள்முதற்கொண்டு ஸ்ரீபகவானுடைய கட்டளையினால் நாமெல்லோரும் அநுஷ்டித்துக்கொண்டு வருகின்ற ஏகாதசிவிரதத்தை ஒருதெய்வப்பெண்ணால் உபதேசிக்கப்பெற்ற ருக்குமாங்கத மகாராஜனென்றொருவன் பூலோகத்திலேதன்குடையின் கீழிருக்கும்சகலதேசத்துமனிதர்களையும் இவ்விரதத்தை நோக்கும்படிச்செய்து தானும் அநுஷ்டித்துக்கொண்டு வருகிறான்

த்தையடைந்து அந்தக்காந்தர்வராஜனை ஜெயித்து அவனால் காணிக்கையாகக் கொடுக்கப்பட்ட நவரத்தினங்களைப் பெற்றுத் திக்குப்பாலர்களிடத்திலே போய் அவர்கள் யாவரையும் ஜெயித்து வருகையில் மகாதேவனாகிய வருணராஜன் தோற்றுப்போய்விட அம்மகாதேவனுடைய புத்திரியைப் பகரித்து நாகலோகத்தையடைந்து அந்த நாகராஜனை வெற்றிகொண்டு அவனுடைய புத்திரிகாரத்தினங்கள் ஆயிரம் பேரையும் அபகரித்துக்கொண்டு வந்து தன் பிதாவினுடைய திருவடிகளில் அந்தரத்தினங்களைச் சமர்ப்பித்துத் தான் ஜெயங்கொண்ட வரலாற்றையும் ஆயிரத்தொருகன்னிகைகளைத் தான் கிரகித்துக்கொண்டு வந்ததையுஞ் சொல்லித் தன்னுடனிட்டு நிற்கின்ற தர்மாங்கதனை மார்புறத்தழுவி ஆநந்தபரவசனாய்க் கண்ணீரால் அவனை நனைத்து என் உயிரினுஞ்சிறந்த புத்திரதிபமே புருஷசிங்கமே கண்மணியே யென்று கொண்டாடி அந்த ஆயிரத்தொருகன்னிகைகளையும் தன்புத்திரனுக்குக் கலியாணஞ்செய்வித்து அந்த ரத்தினங்களை மோகனாங்கிக்கே கொடுத்து இஷ்டபோகங்களை யனுபவித்துக்கொண்டிருந்தனன்.

இப்படி யனுபவித்துக்கொண்டிருக்கும் நாளில் ஏகாதசிவிரதத்துக்குப் பங்கஞ்செய்யச்சமயம் பார்த்துக்கொண்டிருக்கின்ற அந்த மோகனாங்கியினுடைய காமாந்தகாரத்திலகப்பட்டு அவளோடு சரசமாக மதுரவசனங்களைப் பேசி விளையாடி இருவருந் தாம்பூலாதிகளைத் தரித்துக்கொண்டு இருக்குஞ்சமயத்தில் வழக்கப்படி ஸ்ரீஹரிதினமாகிய ஏகாதசிவிரதத்தைத் தொடக்கஞ்செய்யுந்தசமிதிதி இன்றையத்தினமென்று வள்ளுவன் நகரமெங்குந்திரிந்து பறைசாற்றினன் அப்பறைமுழக்கத்தை ருக்குமாங்கத மகாராஜன் கேட்டமாத்திரத்தில் ஸ்ரீஹரி ஹரியென்று பகவந்நாமங்களை ஸ்மரித்துக்கொண்டே பஞ்சசயனத்தைவிட்டுப் பூமியில்குதித்து வாயிலுள்ள தாம்பூலத்தை யுமிழ்ந்துவிட்டுச் சரசவார்த்தைகளைப் பேசாமல் ஸ்ரீபுருஷோத்தமனை ஸ்மரணைசெய்துகொண்டிருக்கின்ற மகாராஜனைப் பார்த்து இதுபரியந்தம் அரசன் ஏகாதசிவிரதத்தை ஆசரிப்பது தனக்குத் தெரியாததுபோல மோகனாங்கி வஞ்சகமாகச் சொல்லுகிறாள் வாரீர் எம்பிராணபதமாகிய இஷ்டநாயகரே என்னுடனே சரசவார்த்தைகளைப் பேசிக்கொண்டிருந்தாற்போலிருந்து சரேலென்று பூமியிற்குதித்துத் தாம்பூலத்தையுமிழ்ந்துவிட்டு ஸ்ரீபகவந்நாமங்களை ஸ்மரிப்பதற்குக் காரணமென்ன இதென்ன ஆச்சரியகரமாயிருக்கின்றது எனக்கு விசிதமாகச் சொல்லக் கடவீரென்று பிரார்த்தியா நின்ற மோகனாங்கியைப் பார்த்து ஸ்ரீவஷி

ணவ சரமோபாய நிஷ்டனாகிய ருக்குமாங்கத மகாராஜனானவன் சொல்லுகின்றான் வாராய் மோகனாங்கியே இன்றைத் தினம் ஏகாதசி மகாவிரதத்தைத் தொடக்கஞ் செய்யுந் தசமியின் மேலும் இதுகார்த்திகைமாதம் இந்தமாதம் மற்றமாதங்களுக்குள்ளேமுக்கியமானது இதனுடையவிவரத்தையும் ஏகாதசியினுடைய மகாத்மியத்தையுஞ் சுருக்கமாகச் சொல்லுகிறேன்கேளென்றுருக்குமாங்கத மகாராஜன்சொல்லுகிறான்.

ருக்குமாங்கதமகாராஜன்வாக்கியம்.

வாராய் மோகனாங்கியே தமது நிர்ஹேதுகஜாயமானகடாக்ஷத்தினால் திருவுந்தியில் சதுர்முகனைப்பெற்று அவனுடையபுருவவேர்வைக்குமிழியினின்றுஞ் சங்கரபகவானைத் தோற்றுவித்து அவர்களுக்குச் சிருஷ்டித்தொழிலையுஞ் சங்காரத்தொழிலையுங் கொடுத்து அவர்களுக்குள்ளேதான் அந்தரியாமியாயிருந்து அந்த இரண்டுகிரியைகளையும்நடத்திக்கொண்டு அம்முறையின்படித் தாம்உபேந்திரனாகிப்பிராணகோடிகளைரக்ஷித்துச் சகலாண்டங்களுக்கும் உள்ளும்புறம்புமாய்நிறைந்து ஷாட்குண்ணிய பரப்பிரமமாய்விளங்காநின்ற சர்வேஸ்வரரானவர் முப்பதிரண்டுலக்ஷம்யோசனை விசாலமுள்ள திருப்பாற்கடலுக்குள்ளே யிராநின்ற பத்துயோசனைப்பரப்பும் எழுயோசனை யுயரமுமுள்ள திருக்கோயிலில் மூன்றுலக்ஷம் யோசனைநீளமும் ஒன்றரைலக்ஷம் யோசனை அகலமுமுடைய சேஷசயனத்தின்மீது இரண்டரை லக்ஷந் தீர்க்கமாகிய திருமேனியுடையவராய்ச் சயனித்துப் பகலுமிரவுமாகிய காலசக்கர நடக்கும்படித் திருக்கண்கள் விழித்துறங்காநின்ற யோகநித்திரையிலிருந்து எழுந்தருளுகின்ற பிராதகாலமாக்கும் இந்தக்கார்த்திகைமாதம் ஸ்ரீசர்வேஸ்வரர் திருக்கண்விழித்தருளுகின்ற காலமாகவும் திரிவிக்கிரமமூர்த்தியானவர் மூன்றடிமண் இரந்து திரிலோகத்தையும் இரண்டடியா லளந்துகொண்டு மற்றோரடிக்குத் தன்மேல்திருவடிவைத்துப் பாதாளலோகத்தில் அழுத்தியபோது மகாபலிசக்கிரவர்த்தி திரிவிக்கிரமமூர்த்தியைச் சேவித்து இத்தினத்தில் யாவரும்தீபாராதிகளையியற்றித் தேவரீர் என்விஷயத்தில்நடாத்திய சரித்திரங்களைச்சொல்லி விரதத்தையாசரிக்கும்படிவரத்தைக்கேட்டுப்பெற்றுக்கொண்ட அந்தக்காலமாகவும் அக்கினிநக்ஷத்திரமாகிய கிர்த்திகை நக்ஷத்திரமும் பௌர்ணமிதிதியும்சம்பந்தப்படுகின்றபடியால் அக்கினியினாலே ஸ்ரீசர்வேஸ்வரருக்குத் திருப்திசெய்து சாந்திசெய்யவேண்டிய காலமாகவும் விளங்காநின்ற இந்தமாச முழுமையும் லோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரராகிய ஸ்ரீஹரியானவர் அர்ச்சாவதாரராய் எழுந்தருளி

யிருக்கும் திருக்கோயில்களிலும் தங்கள்தங்கள் கிரகங்களிலுந்திபரா
சிகளைஏற்றிவைக்க வேண்டுமென்றும் மாமிசமுதலிய தாமசபதார்த்த
ங்களை விலக்கவேண்டுமென்றும் அவற்றை விலக்காமல் புசித்தவர்கள்
ஊர்ப்பன்றியாய்ப்பிறப்பார்களென்றும் மாசங்கள்தோறும் இரண்டு
பட்சங்களிலும் வருகின்ற ஸ்ரீஹரிதினமாகிய ஏகாதசிவிரதத்தை யநு
ஷ்டிக்காமற்போயினும் இந்தமாசத்துப் பூர்வபட்சத்திலாவது தசமி
யில் ஒருவேளைபோஜனஞ்செய்து ஏகாதசியில் ஆகாரநித்திராதிகளைஒ
ழித்து மறுநாள்துவாதசியில் அருணோதயத்துக்கு முன்னே ஸ்ரீஹரி
யைஆராதித்து ஒரு அதிதியோடுபாரணைசெய்து ஸ்ரீயப்பதியினுடை
ய ஆலயங்களிலும் பகவத் குணாநுபவஞ்செய்யுமிடங்களிலுஞ்சென்
று அன்று பகற்பொழுதையும் நித்திரையில்லாமலே போக்கி இராத்தி
ரிக்கும் போஜனஞ்செய்யாமல் இப்படிநான்குவேளை போஜனத்தை
யும் ஒழித்து ஏகாதசிவிரதத்தை யாசரிக்க வேண்டுமென்றும்இம்மாச
த்தில் நோற்கவேண்டிய கிருஷ்ணவிரதத்தை யதாசாஸ்திரமாகக்கொ
ண்டாடவேண்டுமென்றும் இந்தவிரதிகள் நிரதிசயானந்த பரமபதத்
தையடைவதற்குச் சந்தேகமில்லையென்றும் வைதிகபுராண இதிகாசங்
கள்கூறுகின்றன. ஆகையால் இக்கார்த்திகைமாசப்பூர்வபட்ச ஏகா
தசிக்கு முதல்நாளாகியதசமிதிதி இத்தினத்தில் நான் பஞ்சசயனத்தின்
மேல் உட்கார்ந்துஉன்னோடு சல்லாபவார்த்தைகளைப்பேசித் தாம்பூலா
திகளைத்தரித்துவைதிகவிரதபங்கஞ்செய்துகொள்ளக்கூடாதென்று ரு
க்குமாங்கதமகாராஜன் சொல்லக்கேட்ட மோகனாங்கிசொல்லுகிறாள்
வாரீர் என்பிராணபதமாகிய நாயகரே முடிவிலேசொன்ன கிருஷ்ண
விரதத்தை எப்படிஆசரிக்கிறது ஆசரிப்பதினாலே யுண்டாகும்பலன்
யாது அதுகளைஎனக்கு விசிதமாகச் சொல்லவேண்டுமென்று பிரார்த்
தியாநின்ற மோகனாங்கியைப்பார்த்து மகாராஜன்சொல்லுகிறான்.

வசிஷ்டர்வாக்கியம்.

வாராய்மார்த்தண்டகுலேசனாகிய மருத்துமகாராஜனே இப்படி
த்தன்னைப்பிரார்த்தியாநின்றமோகனாங்கியைப்பார்த்துருக்குமாங்கதம
காராஜன் சொல்லுகிறான் கேளாய் பெண்ணமுதே ஆடிமாத முதலா
கிய நான்குமாதங்களுஞ் சிரார்த்தமாதமென்றுசொல்லப்படும் இந்த
நாலுமாசமும் சாதுர்வர்ணத்தார்களும்விரதத்தை நியமித்துக்கொண்
டுயதாசாஸ்திரமாக எட்டுஏகாதசியையும் உபவாசமிருந்துதமக்கிஷ்ட
மான பதார்த்தங்களிலே ஏதாவதொன்றைப் புசிக்கிறதில்லையென்றுத
ங்களுக்குள்ளேசங்கேதஞ்செய்துகொண்டு எண்ணெயைத்தீண்டாமல்
நெய்யிட்டுக்கொண்டு நெல்லிப்பருப்பாகிய அனைப்பினால் அதைப்

போக்கி ஸ்நானஞ்செய்துபிராமணோத்தமர்களாகிய ஸ்ரீவைஷ்ணவர்
களை உபசாரஞ்செய்து அழைத்துவந்து ஒருதிவ்வியாசனத்தி லெழுந்
தருளப்பண்ணிச் சாளக்கிராமம் ஸ்ரீமூர்த்தங்கரம் கோதானம் பூதான
ங்களைச்செய்து ஐப்பசிமாசமுங் கடந்தபிற்பாடு இந்தக்கார்த்திகைமா
தத்து முப்பதுதினமும் கிருஷ்ணவிரதத்தை மேற்கொண்டு ஒருவே
ளை போஜனமும் ஒருவேளை பாலுமாகப்புசித்து அதற்குக்கூடாமை
யாயிருந்தால் ஒருநாள் போஜனமும் ஒருநாள் பால்கனிமாவுமுதலி
ய ஆகாரங்களையும்உண்டு ஸ்ரீஹரிஸ்மரணைசெய்துகொண்டு கிருஷ்ண
விரதத்தை யனுஷ்டிப்பார்கள். இந்த மாதங்களில்செய்ததானம் சிறி
தாயிருப்பினும் அது அனந்தாயிரயாகப்பெருகும் இவ்வாறு கிருஷ்
ணவிரதத்தை யாசரிப்பவர்கள் ஜனனமரணமாகிய சமுத்திரத்தைக்க
டந்து பிரமருத்திராதிகளுக்கும் அடைகிறதற்குத் துல்லபமாகியபர
மபதத்தை எளிதிலேபெறுவார்கள். இதுமேற்சொன்ன இதிகாசபுரா
ணாதிகளின் கருத்தென்றுசொல்லி வாராய்கோமளமே இன்றுஹரிவாச
ரத்துக்குத் தொடக்கஞ்செய்யுந் தசமிதிதியாகையால் நால்திர்த்தமா
டி ஊர்த்துவ புண்டரந்தரித்து ஸ்ரீபகவானை ஆராதித்து ஒருவேளைப்
போஜனஞ்செய்து இராத்திரிக்குஸ்திரீசங்கமமில்லாமல் தனியேதர்
ப்பசயனத்தில் சயனிக்கவேண்டுமென்றனன்

அதுகேட்டு மோகனாங்கியானவள் நாம் பிரமதேவனிடத்திலிருந்
துவந்து நெடுநாளாச்சு இதுவரைக்கும் இந்திராஜனுடைய ஏகாதசிவி
ரதத்தைக் கெடுப்பதற்குச் சமயம் வாய்க்காமற் போய்விட்டது இப்
போது அந்தப்பிரமதேவருடைய கடாக்ஷத்தினாலே நல்லசமயம் வா
ய்த்தது இந்தக்காலந்தப்பிப்போனால் இனிஎப்போது நமக்குக் கிட்
டுமென்று தனக்குள்ளே ஆலோசனை பண்ணிக்கொண்டு வாராய் என்
இஷ்டநாயகரே தர்மசொரூபர்களாகிய அரசர்கள் தங்களுடைய கு
டையில் கீழுள்ளஜனங்களை வர்ணாச்சிரம தர்மந்தவறாமல் செங்கோல்
செலுத்தித் துஷ்டநிக்கிரகம் சிஷ்டபரிபாலனஞ்செய்து நெற்பயிர்
முதலானவைகளை யழிக்கவொண்ணாமல் மிருகங்களை வேட்டையாடிக்
கொன்று, புசிக்கும்படிச் சாஸ்திரங்களில் விதித்திருக்கின்ற முயல்
முதலியவற்றைக் கொண்டுவந்து பாகஞ்செய்து திவ்வியான்னங்க
ளோடு பக்ஷித்து அதிக ரூபலாவண்ணியமுள்ள யௌவனஸ்திரீக
ளோடு நானாவித காமபோகங்களை யனுபவிப்பார்கள் இதன்றோ ரா
ஜதர்மமென்றுசொல்ல அதற்குமகாராஜன் சொல்லுகிறான். வாராய்வ
னிதாரத்தினமே ஸ்ரீஹரிதினமாகிய ஏகாதசியை அநாதரஞ்செய்து
புசித்து மூடமதியானவன்தமக்கு ஒப்பும்உயர்வுமில்லாத ஸ்ரீபரந்தா

மனா அஜசங்கிராதிகளோடு சமானமென்று நினைக்கிறவன், அபௌரு
ஷேயமாய் நித்தியமாய் விளங்காநின்ற வேதங்களை உல்லங்கனஞ் செ
ய்தவன், பிராமணனைப் பசுவைச் சிசுவை ஸ்திரீயைக் கொலைபண்ணி
னவன், சத்துருவால் வருத்தப்பட்டுத் தன்னை அடைக்கலம் புகுந்த
வனைக் கைசோரவிட்டவன், செய்நன்றிமறந்தவன் ஆலயங்களிலேபசாரச்
சிசெய்தவன், தனக்குப்போதகாசிரியனை வணங்க நாணுகின்றவன், யு
த்தகளத்தில் தன்னரசனைக் கைவிட்டோடினவன், மாதாபிதாக்களைக் கண்
டுந்தொழாதவன், தாய்தந்தையர்களைத் தூஷிணித்தவன் தேடிவந்தவி
ருந்தை யோட்டிவிட்டுத் தனியேசாப்பிட்டவன், பரதாரகமனஞ்செ
ய்கின்றவன், தானறிந்ததை இல்லையென்றவன், முதலானவர்கள் அ
டைகிற நரகத்தைப் பெறுவானென்பது புராணசித்தம். ஆகையால்
இத்தமகாவிரதத்தை யனுஷ்டிக்காமல் விடமாட்டேனென்று சொல்
லுகின்ற ருக்குமாங்கத மகாராஜனைப்பார்த்து மோகனாங்கி சொல்
லுகின்றாள்.

கேளீர்பூபதி நீர் என்னுடனே சரசசல்லாபவார்த்தைகளைப்பே
சியென்னைக் காமாந்தகாரத்துக் குள்ளாகி ஏறவிட்டேணியை வாங்குவா
ரைப்போல என்னோடுகலவாமல் தனியேயிருக்க எண்ணங்கொள்வது
உமக்குத்தகுமோ இப்போது என்னை ஆலிங்கனாதிகள்செய்து அணை
யாவிட்டால் சகிக்கஎன்னால் முடியுமோ காலதாமசம்பண்ணாமல் என்
னுடைய கோரிக்கையை ஈடேற்றி இன்றுமுழுதும் என்னோடுசேர்ந்
திருந்து இஷ்டபோகங்களை யனுபவிக்கக்கடவீரென்று இன்னும்பல
வாறாகக்கேட்டுக் கொள்ளுகின்ற மோகனாங்கியைபார்த்து மகாராஜன்
சொல்லுகிறான். வாராய் சுகுணசீலையே முத்திசாதனமாகியஇந்தவை
திகவிரதத்தை யாசரிக்காமல் விடமாட்டேன் விரதபங்க நேரிடும்படி
இன்றுஉன்னோடு சங்கமமுஞ் செய்யமாட்டேனென்று திடமாகச்சொ
ல்லினன். இப்படிச்சொல்லிய இந்தமகாராஜனானவன் நம்முடையவ
சப்படுகிறவனாகக் காணப்படவில்லையே ஆயினும் நாம்முன்னே இவ
னிடத்தில் பெற்றிருக்கும் வரத்தைக்கொண்டு இவன்விரதத்தைப்பங்க
ஞ்செய்வோமென்று தனக்குள்ளே தீர்மானித்துக்கொண்டு சொல்லு
கின்றாள் வாரீர்சத்தியவிரதசீலரே ஆதியில்வேட்டைக்குவந்து மந்தர
கிரிசமீபத்திலேஒருதிவ்வியசந்தனச்சோலையில் ஸ்ரீஹரிநாம சங்கீர்த்
தனஞ் செய்து கொண்டிருந்த என்னைக் காந்தருவ விவாகமாகப்புண
ர்ந்தபோது ஸ்ரீமாதவருடைய திருவடியின்மேல் பிரமாணஞ் செ
ய்து நீர்கொடுத்திருக்கிறவரம் ஒன்றையும் இப்போது எனக்குத்தயை
செய்யவேண்டும். அதாவது இன்றையத்தினம் நீர் என்னுடையமனோ

பிரஷ்டப்படி என்னோடேசேர்ந்து சுகபோகங்களை யனுபவித்து எனக்குத் திருப்திசெய்வது தான் வேறன்றென்று சொல்லுகிற மோகனாங்கியைப்பார்த்து ருக்குமாங்கதமகாராஜன் சொல்லுகிறான். வாராய்சுந்தரீ உனக்குநாங்கொடுத்திருக்கிற வரத்தைத்தருகிறதில்லையென்றதடுக்கிறதில்லை ஆயினும் இந்தஸ்ரீஹரிதினமாகிய ஏகாதசிவிரதத்தை ஆதரிக்காதவனுடைய ஜன்மம் சந்திரோதயமில்லாத இராக்காலமும், நற்குணநற்செய்கையமைந்த குலஸ்திரீயில்லாத வீடும், கற்றுவல்லவரில்லாதசபையும், ஸ்ரீகோவிந்தருடைய ஆலயமில்லாததேசமும் துளசியில்லாதநந்தவனமும், நாயகனில்லாதஸ்திரீயும், தயைசாந்தியில்லாத தபமும்போல வியர்த்தமாச்சே, ஆகையால் நீஇன்று விரதத்திற்குமாத்திரம் குறைவுநேரிடாமல் என்னுயிரையாவது என்தேவிமார்களையாவது என்பிரியமுள்ள புத்திரனையாவது என்சகலசம்பத்துக்களையாவதுகேட்டால் யாதொருதடையுமில்லாமல்கொடுக்கிறேன் ஸ்ரீஹரிவிரதத்தை மாத்திரங் கெடுக்கநினைக்கவேண்டாமென்று மிகவும்இரந்துகேட்கின்ற மகாராஜனைப்பார்த்து மோகனாங்கி சொல்லுகின்றாள். வாரீர்ராஜரிஷிசிரேஷ்டரே எனக்குச்செய்திருக்கிற சத்தியத்தைக்காப்பாற்றாமல் ஏகாதசிவிரதத்தைமாத்திரம் அநுஷ்டித்து என்னபலனைக்காணப்போகிறீர்பூர்வத்தில் விசுவாமித்திரருக்குச்சொல்லிய வாக்குத்தத்தத்தை நிறைவேற்றுவதினிமித்தமன்றோ அரிச்சந்திரமகாராஜனானவர் தம்முடைய நாடுநகரங்களைஇழந்து பெண்சாதிபிள்ளைகளையும் விட்டுப்பிரிந்துஒருபுலையனுக்கு அடிமைப்பட்டார். மேலும்தசரதச்சக்கரவர்த்தியானவர் தம்முடைய இளையபெண்சாதிக்குத் தாம்கொடுத்திருந்த வரத்தைப்பரிபாலனஞ்செய்யும்பொருட்டன்றோ தம்முடையபிராணனையும் விட்டுவிட்டார். இன்னும்அநேக சத்தியசந்தர்களாகிய அரசர்க ளுடைய சரித்திரங்களைக் கேட்டுமறியீரோ உத்தமமாகிய சந்திரவமிசத்து மகாராஜனாகவும் ஸ்ரீஹரிபக்தனாகவுமிருந்து நீர்இப்படிச் சத்தியந்தவறுகிறதாயிருந்தால்நானென்னசெய்யப்போகிறேனென்றுஅதிகதுக்கத்தோடு கண்களில்ஜலம் தாரைதாரையாயொழுகும்படித் தன்னுடலில்தரித்திருந்த திவ்வியாபரணங்களையெல்லாங் கழற்றியெறிந்துவிட்டு முகத்திலணிந்த சிந்தூரதிலகத்தை யழித்துப் புஷ்பங்களுதிர்ந்த பூங்கொம்பு போலத் தரையில்விழுந்து புரண்டுபுலம்பிக்கொண் டிருந்தனள்.

இதுகண்டு மகாராஜனானவன் இவளிடத்திலே அல்ப போகத்தை இச்சித்தன்றோ இப்போது இந்தச்சங்கடத்துக்குள்ளானோம்இதென்ன மதிமோசம் போனோமேயென்று தனக்குள்ளே கிலேசமடைந்துபெ

ருமூச்சுவிட்டுச் சோர்ந்து சுவரிலேசாய்ந்து சித்தப்பிரமையடைந்திருந்தனன். இந்தமோகனாங்கியினுடைய கூக்குரலைக்கேட்டுத் தர்மாங்கதனானவன் நம்முடைய அரண்மனைக்குள்ளே இதுவரையுங்கேட்டறியாத அழுகுரல்இன்றைத்தினம் பிறப்பதற்குக்காரணமென்ன நம்முடையபிதாவாகிய மகாராஜனுக்குத்தான் என்னசம்பவித்ததோ மற்றவர்களுக்குத்தான் என்னதீங்குநேரிட்டதோ எதுவோ அதையறியவேண்டுமென்று தனக்குள்ளே அதிகவிசாரத்தையுடையவனாய்ச்சீக்கிரமாக ருக்குமாங்கதனுடைய இருப்பிடத்துக்குவந்து மகாராஜன்சோர்ந்திருப்பதையும் மோகனாங்கி பூமியிற்புரண்டுகொண்டு புலம்புவதையும்பார்த்து அவ்விருவரையுஞ்சேவித்து மோகனாங்கிக்குச்சமீபத்திலேபோய் வாரீர்என்மாதாவே உமக்குஆராலே என்னகுறைநடந்தது அதைஉம்முடைய புத்திரனாகிய அடியேனுக்குச் சொல்லியருளவேண்டுமென்றுபிரார்த்தியாநின்ற தர்மாங்கதனைப்பார்த்து மோகனாங்கிசொல்லுகின்றாள். வாராய்தர்மாங்கதா யாருமெனக்கொருபொல்லாங்கு செய்யவில்லைஉன்னுடையபிதாவானவர்ஆதியில் என்னைவிவாகஞ்செய்துகொள்ள அழைத்துவரும்போது எனக்குஒருவரங்கொடுத்திருந்தார் அந்தவரத்தைஇன்றைக்கு எனக்குத்தரச்சொல்லிக்கேட்டால் அதைத்தடைசெய்கின்றனர் இதுவேயல்லாமல் மற்றொருவரால் எனக்கொருபொல்லாங்குநேரிடவில்லை முன்னிருந்த சந்திர வமிசத்துராஜர்கள் ஒருவருஞ் சத்தியந்தப்பிப் போனதில்லையே இப்போதுஇவர்எந்தவதுவினாலோ அசத்தியத்துக்கு உட்படுவராகக்காணப்படுகிறார் இப்படிப்பிரமாணத்தைக் காப்பாற்றாதவரிடத்தில் பாரியாளாகவிருந்து வாழ்வதிலும்பிராணனைவிட்டுவிடுகிறது சர்வோத்தமமன்றோ வென்று பலவாறாகச்சொல்லுகின்ற மோகனாங்கியைப்பார்த்துத் தர்மாங்கதன்சொல்லுகிறான்.

வாரீர்அம்மா நம்முடையமகாராஜாவானவர் சத்தியந் தவறுகின்றவரல்லர்நான்அதையறிந்துவருகிறேன் நீரொன்றுக்கும்பயப்படவேண்டாமென்று தேற்றிவிட்டுத் தன்பிதாவாகிய ருக்குமாங்கத மகாராஜனிடத்திற்சென்று வாரீர்என்பிதாவே நீர்தமக்குச்செய்திருந்தசத்தியத்தைப் பிசகுகிறஎன்தாயாகிய மோகனாங்கியம்மாள்சொல்லுகிறாளேபிரமகல்பம்வந்தபோதினுஞ் சத்தியந்தவிருந்துமாறாசபருஷ்டோஷ்டராகிய உமக்குஇந்தஅபவாதம் இப்போதுவருவதற்குநிமித்தமென்னவென்று வணங்கிக்கேட்கின்ற தர்மாங்கதனைப்பார்த்து விதர்ப்பதேசராஜனாகியருக்குமாங்கதன் சொல்லுகிறான் கேளாய்அருமைந்தபிள்ளையே நான்பூர்வத்தில் அவளுக்குஒருவரங்கொடுத்திருந்ததுண்டு அந்தவரத்து

க்காகமகாவிரததினமாகிய இன்றுநான் தன்னோடுகலந்து இஷ்டபோகங் களையனுபவிக்கும்படி என்னைத்துராகதமாகக்கேட்கின்றாள் விரதபங்கம்நேரிடவொட்டாமல் வேறெதைக்கேட்பினும்நான்தருகிறேனென்று பலஇனியவசனங்களாற்கேட்டுக் கொண்டாலும் எனக்குஇணங்கவில்லையே இதைத்தான் நான்சத்தியம்பிசகுகிறதாகச் சொல்லுகின்றாள் இதற்கு நாமென்ன செய்யப்போகிறோமென்று தனக்குள்ளே அதிக துக்காக்கிராந்தனாய்ச் சொல்லினன், இதுகேட்டுத்தர்மாங்கதனானவன் நம்முடையபிதாவாகிய மகாராசனானவர் விரதத்துக்குச்சிறிதும்குறைவுசம்பவிக்காமல் சத்தியத்தையும்நிறைவேற்றவேண்டுமே இதுஎப்படி முடியப்போகிறதென்று தனக்குள்ளே ஆலோசித்து ஸ்ரீஹரியைத்தியானித்துக்கொண்டே தன்தாய்மார்களண்டையிற்போய் இந்தச்செய்திகளையெல்லாம் விவரித்துச்சொன்னான் சொன்னவுடனே அந்தநூறுதேவிமார்களும் ஐயோநம்முடையநாயகருக்கு இப்படிப்பட்ட தர்மசங்கடமும் நேரிட்டதேயென்று சிந்தாகுலத்தையடைந்தவர்களாய்ச் சீக்கிரத்திலேதங்கள் நாயகனாகிய மகாராஜனிடத்திற்போய் அவர்களுக்குள்ளேசிறந்தவளாகிய சந்தியாவளியென்பவள் சொல்லுகின்றாள்

வாரீர் எங்களுக்குப் பிராணபதமாகிய நாயகரே நீர்சகலசாஸ்திரங்களையும் விசாரணை செய்தவராக இருந்தும் எவ்வளவேனும் ஆலோசனையில்லாத காரியத்தைச்செய்துகொண்டீர் எங்களுக்குத்தெய்வமாகிய உம்முடையகருத்துக்கிசைந்து நடந்துகொள்வதன்றோ எங்களுடைய முக்கியகடமையென்று நினைத்து ஆதியில் நீர் யத்தனித்தவிவாககாரியத்துக்கும் ஒத்துக்கொண்டோம் அதனாலன்றோ இப்படிப்பட்டசங்கடம்நேரிட்டது இதுவும் ஸ்ரீ சர்வேஸ்வரருடைய சங்கல்பமேயல்லாமல் வேறேஎன்ன இருக்கின்றதென்று சொல்லிவிட்டு மோகனாங்கியினிடத்திற்சென்று வாராய்தங்கையே மோகனாங்கி என்னகாரியஞ்செய்தாய் இதோசித்திரப்பிரதிமைகளாலும் முத்துமாலைகளாலும் புஷ்பமாலைகளாலும் அலங்காரஞ்செய்து பனிநீர்தெளித்துப் பஞ்சசயனங்களை விரித்திருக்கின்ற சப்ரகூடமஞ்சமிருக்கச் சுகுமாரமாகிய மேனியில் புழுதிபொருந்தும்படி ஒன்றுமில்லாதவளைப்போலப் பூமியிற் படுவானேன் இதென்னகோலம் எழுந்திரு எழுந்திருவென்று தன்னிரண்டு கைகளாலுஞ் சேரத்தழுவி எடுக்காநின்றசந்தியாவளி தேவியினுடைய இரண்டுகரங்களையும் நீக்கிவிட்டு மறுபடியுந்தரையில் படுத்துக் கண்களில்நீர்பெருகத் துக்கித்துக்கொண்டிருந்தனள். அதுகண்டு சந்தியாவளிதேவியானவள் அஞ்ஞானப் நிறைந்த மூடமதிகளை

ந்தபின் தம்முடைய மணவாளன் அழகும் நற்குணங்களும் சம்பத்துமில்லாமல் குரூபியாகவும் விவேகசூநியனாகவும் தரித்திரனாகவும் இருந்தபோதினும் அவனுக்கு வேண்டிய உபசாரங்களைச் செய்வதல்ல மனஞ்சிறிதுங் கூசாமல் அவனைத் தெய்வமாகப்பாவித்து அவன்சொல்வழியிலே நின்று தமக்கென யாதொருசுதந்தரமுமில்லாமல் நடப்பதன்றோ உத்தம ஸ்திரீகளுக்குப் பரமதர்மம், இதிருக்கட்டும் எவ்வொருத்தி தன் புருஷன் சொல்லைமீறி நடக்கின்றாளோ அந்த அதமஸ்திரீ புழுவாகப்பிறப்பாள் இதைக்குறித்து எனக்கு அநுபவசித்தமாகிய ஒருவிசித்திரகதைசொல்லுகிறேன் கேளென்று சொல்லுகிறாள்.

சந்தியாவளிதேவிவாக்கியம்.

கேளாய் பிரமதேவருடைய புத்திரிகாரத்தினமே எனக்குவிவாகம் நடப்பதற்கு முன்னே மாளவதேசாதிபதியாகிய என்பிதாவினுடைய சம்ரக்ஷணையிலிருக்கும்போது பிரமாதி பிபீலிகாந்தமான சமஸ்தபிராணிகோடிகளுக்குங் காமத்தை உண்டாக்கி லோக விர்த்திசெய்யாநின்ற இட்சுகோதண்டபாணியாகிய மன்மதனைக்குறித்துக் கலியாணமில்லாத கன்னிகைகள் சகலசுகுணங்களுமமைந்த அதிசௌந்தரபுருஷன் தங்களுக்குப் பர்த்தாவாகவும் தங்களுடைய மனம் அந்நியபுருஷர்களிடத்திற் செல்லாமல் தங்களுக்குரிய நாயகனிடத்தில் நிலைமெய்யத்திறம்படியாகவும் தைமாதத்தில் நோற்கின்ற விரதத்தினத்தில் நானுபவாசமிருந்து என்தோழியர்களோடு விளையாட்டுத்தனத்தால் மடைப்பள்ளியண்டைபோனேன் போனசமயத்தில் மடைத்தொழிலாளர்கள் பெருங்கட்டைகளைப்பிளந்துகொண்டிருந்தனர்கள் அவர்களிலேஒருமடையன் பிளந்த கட்டையிலிருந்தும் ஒருபுழு வெளிப்பட்டு ஆயாசத்தாலே நெளியமாட்டாமல் சோர்ந்திருப்பதைக்கண்டு பரிதபித்து என்கையிலெடுத்துச் சற்றுநேரம் வைத்துக்கொண்டு சைத்தியோபசாரஞ்செய்தேன் அப்போது அந்தக் கிருமியானது மூர்ச்சை தெளிந்து என்னைப்பார்த்து அதி ஆச்சரியகரமாகச் சொல்லுகின்றது.

வாராய் சந்தியாவளீ நான் முற்பிறப்பிலே தளூட்டியனாகிய ஒரு சிற்றரசனுக்குப் புத்திரியாய்ப்பிறந்திருந்தேன் ஸ்ரீவிஷ்ணுபக்தனாகவும் மிகவும் சாதுவாகவுமிருந்த ஸ்ரீஹரிபாத இருதயனென்னும்பெயரையுடைய ஒருவனுக்கு வாழ்க்கைப்பட்டு அவனோடு சுகபோகங்களையனுபவித்துக்கொண்டு வரும்நாளில் அந்தப்புருஷன் பகவத் கைங்கரியத்தில் தன்னிடத்திலுள்ள பொருள்களையெல்லாஞ் செலவழித்தான் மரக்கலங்களிலேறிப் பாரசீகமுதலிய அந்நியதேசங்களிற்போய்ச் செய்யும் வியாபாரத்தில் நஷ்டம் வந்தபடியால் என் பிதாவானவன்

எனக்கிட்ட ஆபரணங்களையும் தனங்களையுஞ்சிறிதாக என்னிடத்தில்வா
ங்கி அந்தக் கைங்கரியத்திலேயே செலவிட்டுக்கொண்டுவருவான் அப்
படிச்செய்யும் நாள்களிலே ஒருநாள்ராத்திரிகடகத்தைக்கேட்டான் நா
ன் மூடத்தனத்தால் அவன்சொல்லை மறந்து இதுபரியந்தம் ஸ்ரீபகவ
த் கைங்கரியஞ்செய்து நீர் வாங்கிக்கொண்டதுபோதும் இந்தகடகத்
தை நான்கொடுக்கிறதில்லையென்று வெறுப்பாகச்சொன்னேன் அதன்
மேல்- அவன் இனி நாமென்னசெய்யப்போகிறோம் கைங்கரியம் எப்
படி நடக்கப்போகிறதென்று தனக்குள்ளே யோசனைசெய்து பயமடைந்து
நாவிகசாஸ்திரத்தில் தான் தேர்ந்தவனாதலால் ஒரு வியாபாரியினிடத்
திலமர்ந்து அந்தவர்த்தகனுடைய மரக்கலத்திலேறித் திடாந்தரங்களு
க்குப்போகும்போது வழியில்மரக்கலமுடைந்து அதிலுள்ள ஜனங்க
ளும் பண்டங்களும் நஷ்டமாகி என்கணவன்மாத்திரம் ஸ்ரீமுகுந்தரு
டைய கடாக்ஷத்தாலே ஒருபலகையைப்பற்றி நீந்திக்கொண்டு இலங்
கையைச்சேர்ந்த ஒருசிறியதீபத்தையடைந்தான் அங்குள்ள பலவ
ர்க்கங்களைப்புசித்து ஒரு விருக்ஷத்தினடியில்படுத்து இவ்வாறு நாள்க
ளைக் கொண்டுவருகையில் ஒருநாளிந்தத்துஷ்டன் காம்போஜதேசத்து ராஜனு
டைய குமாரத்தியைச் சிறைப்பிடித்துவந்து தான்கலியாணஞ்செய்து
கொள்ள அவ்விடத்தில் வைத்திருந்தான் அவ்வரக்கனுடைய எண்ணத்
தை அவன் மனைவியறிந்து சிறையிருக்கின்ற ராஜகுமாரத்தியைப் பா
ர்த்து இரகசியமாகச் சொல்லுகின்றாள் வாராய்ராஜகன்னிகையே உன்
னைப் பாபிஷ்டனாகிய என்புருஷன் கலியாணஞ்செய்துகொள்ள எ
ண்ணங்கொண்டிருக்கிறான் நீயோமனுஷியன்பக்ஷியா யிருக்கிறபடியா
ல் அவனைக் கட்டிக்கொண்டு என்னசுகங் காணப்போகிறாய் உன்னைக்
குறித்து எனக்குண்டாகிய பச்சாதாபத்தாலாக்கும் அந்தவார்த்தைக
ளை உன்னிடத்திலேபேசினேன் இப்போது நீயும் நானும் க்ஷேமப்ப
டும்படியான உபாயம் ஒன்றிருக்கிறது அதைச்செய்யலாம் வாராய்க
குமாரீ இந்த இராக்கதன் மகேந்திரனைக்குறித்துத் தவஞ்செய்துபெ
ற்றிருக்கின்ற சூலாயுதத்தை, இதோ ஆலமரத்துநிழலில் சயனித்திருக்
கின்ற மகாபுருஷனிடத்திலே கொடுத்து இவ்வாயுதத்தைப் பிரயோகி
க்கும்படியான மந்திரத்தை என்புருஷன் எனக் குபதேசித்திருக்கிறா
ன் அந்த மந்திரத்தையும் உபதேசித்து அவனைக்கொண்டு அரக்கனைக்
கொன்றுவிட்டு உங்கள் பட்டணஞ்சேர்த்து நாமிருவரும்- அவனையே
விவாகஞ்செய்துகொண்டு மூவருஞ் சுகமாய்வசித்திருப்போம் உன்
னுடைய சம்மதி என்னவென்றுகேட்கின்ற அரக்கியைப்பார்த்து ராஜ
கன்னிகை சொல்லுகின்றாள்.

ன்னை தெரியவருமென்று தனக்குள்ளே எண்ணிக்கொண்டு சொல்லுகிறான்.

ஜோகாட்போகளுக்கிபூர்வத்தில் ஸ்ரீசங்கரபகவானானவர் பிரமதேவருடைய சிரசைக்கிள்ளி யெய்தியபாபமானது தம்மைத்தொடரவும் பிரமகபாலமானது கையிற்சேர்ந்தவும் அவ்விரண்டாலும் அந்தருத்திர பகவானானவர் மிகுந்தப்பிரமையடைந்து அந்தப்பாதகத்தையும் கபாலத்தையும் எப்படித் தொலைக்கப்போகிறோமென்று தமக்குள்ளே விடாதுலகத்தையடைந்து ஸ்தலவாசஞ்செய்துகொண்டுவருகையில் பதரிக்காச்சிரமத்திற்குப்போய் நாராயணரூபியால் பிரமகபால விமோசனம் பெற்று அங்கிருந்து காசியைவந்து அதனெல்லையைச்சேர்ந்த மாத்திரத்திலே பிரமஹத்திநீங்கிவிட அந்தஸ்தலத்தி லெழுந்தருளியிராநின்ற ஸ்ரீமாதவப்பெருமானைப் பிரார்த்தனைசெய்து ஸ்துதியாகஞ்சுச்சுட்போக உபதேசித்து அந்தஎல்லையைக்கடந்ததுடனேயப்படியேயந்தப்பிரமஹத்தியானது தம்மைச்சூழ்ந்துகொள்ளவுந்தெரிந்து அனுக்ஷமடைந்து திரும்பிப்போய் ஸ்ரீமாதவப் பெருமானைக்கண்டுசேவித்து வாரீர்லோகேஸ்வரர்களுக்கும் ஈஸ்வரரே நீர் வசிக்காநின்ற இந்தஸ்தலத்தைச் சேர்ந்தமாத்திரத்தில் என்னைவிட்டுநீங்கிய பாதகமானது இந்தஸ்தலமானது எல்லையைத்தாண்டினவுடனே என்னைப்பிடிக்கின்றது ஆகையால்நீரிருப்பதினால் அதிபாரிசுத்தத்தைப்பெற்றிருக்கின்றது இந்தஸ்தலத்தில் நான்வாசம்பண்ணும்படி பரமகிருபை செய்யவேண்டுமென்று பிரார்த்தியாநின்ற பரமசிவனைப்பார்த்து ஸ்ரீசர்வேஸ்வரரானவர் இன்றுமுதல் இவ்விடத்திலே வாசஞ்செய்யக்கடவாயென்று அந்தக்காசியைவிட்டுப் பிரியாமையிலெழுந்தருளினார் அன்றுமுதல்காசியில் காளகண்டதிரிநேத்திரராகிய ஸ்ரீருத்திரபகவானானவர் பார்வதிசமேதராய் வாசஞ்செய்துகொண்டிருக்கையில் சிலமஹாருஷிகள் முத்தியைவிரும்பி அந்தப்பரிசுத்தஸ்தலத்தில் வந்து தம்மைக்குறித்துத் தவஞ்செய்தனர்கள், அதைக்கண்டு பரமசிவனானவர் மகாமேருவில் ரத்தினமயமண்டபத்தி லெழுந்தருளியிராநின்ற சதுர்முகப்பகவானிடத்திற்போய் நமஸ்காரஞ்செய்து வாரீர் பிரமதேவர்களே சிலருஷிகள் மோக்ஷத்தைக்கொடுக்கின்றவனாக என்னைநினைத்துத்தவஞ்செய்கின்றனர்கள் வேண்டியவர்களுக்கு முத்திதவிர மற்றவிஷ்டகாமியங்களைக்கொடாநின்ற நான்மோக்ஷத்தை எப்படிக்கொடுப்பேன் அதற்கொருபாயத்தைச் சொல்லவேண்டுமென்று பிரார்த்தியாநின்ற ஸ்ரீருத்திரபகவானைப்பார்த்துப் பிரமதேவர்சொல்லுகிறார்.

வாராய் ஸ்ரீசங்கரனே நீபோய்த்தவஞ்செய்வோருடைய வலது
காதில் ஸ்ரீராமதாரகமந்திரத்தை உபதேசித்தால் அவர்கள்யாவரும்மு
க்தியையடைவார்கள் அதற்குச்சந்தேகமில்லையென்று உபதேசித்தரு
ளினார் அப்படியே ஸ்ரீசிவபெருமானானவர் அந்தருஷிகளுடைய வ
லச்செவியில் உபதேசிக்க அவர்களியாவரும் ஸ்ரீவைகுந்தத்தை அடை
ந்தனர்கள். இப்போதும் விஸ்வேஸ்வரராகிய ஸ்ரீசங்கரபகவானானவ
ர் அவ்விடத்தில்விட்டவர்களுக்கு மரணதசைசம்பவித்தபோது அவ
ர்கள் வலக்காதில் ஸ்ரீசக்கரவர்த்தி திருமகனுடைய நாமமாகியமந்தி
ரோபதேசம்பண்ணிப் பரமபதத்தையடையச் செய்கின்றனர் ஆகை
யால் அந்தநகரமானது முக்திஸ்தலமாகச்சொல்லப்படுமென்றுசா
ஸ்திரசம்மதியாயிருக்கிறது. மோகனுமிவளைப்பார்த்து வாராய்பிரம
த்திரீ ஸ்ரீஹரிபாத இருதயனும் ராக்ஷதியும் ராஜகன்னிகையும் காசிநக
ரத்தைச் சேர்ந்தப்பிறகு ராஜகன்னிகையானவள் அந்த நகரராஜனுக்
குத் தான்வந்திருக்கிற செய்தியை ஒருவர்மூலமாகத் தெரிவித்தனள். த
ன்குமாரத்தி வந்திருக்கிறசமாசாரத்தை ராஜன்கேட்ட மாத்திரத்தில்
இதென்ன ஆச்சரியம்நம்முடைய குமாரத்தியை ஒரு அரக்கன்நெடு
நாள்களுக்குமுன்னமே கொண்டுபோயிருக்க இப்போது அவனிட
த்திலிருந்து தப்பியெப்படி வந்தனளென்று மந்திரிமார்களோடு பேசி
க்கொண்டு இரதத்தின்மேலேறிச் சத்திரத்தண்டையிற்போய்த் தன்பு
த்திரியைக்கண்டு எடுத்தணைத்துக்கொண்டு விரைவுத் தன்னை இராக்கதனு
னவன் எடுத்துக்கொண்டுபோன வரலாற்றையும் தானும் அரக்கியுஞ்
சேர்ந்து இந்த ஸ்ரீஹரிபாத இருதயனால் அந்த அரக்கனைக்கொன்றுவி
ட்டுவந்த வரலாற்றையுஞ்சொல்லினள் உடனே குறுநிலமன்னனாகிய ஸ்ரீ
ஹரிபாத இருதயனையும்ராக்ஷதியையும் தன்புத்திரியையுந் தேரின்மே
லேற்றிக்கொண்டு அரண்மனைக்குவந்து நகரமெங்கும் அலங்கரித்துந
ல்லசுபமுகூர்த்தகாலத்திலே தன்பெண்ணை அந்த ராஜபுத்திரனுக்குக்
கொடுத்து விவாகத்தைமுடித்து அளவிறந்தனத்தையும் ஆபரணங்க
ளையும் சிலதேசங்களையும் தாசிஜனங்களையும்சீதனமாகக்கொடுத்து அ
வனோடு அனுப்பினான். அந்தமூவரும் பட்டணம்வந்துசேர்ந்து என்
புருஷனென்னை அழைத்துவரும்படி ஓராளையனுப்பினான் அதுகேட்
டும்அவனிடத்திலேபோவதற்குவெட்கப்பட்டுப் போகாமலிருந்தேன்
என்பிதாவானவர் சிலபுத்திகளைச்சொல்லி என்னைச்சிவிகையிலேற்றிய
னுப்ப நானும்போய்ச்சேர்ந்து சிலநாள்அவனோடுவாழ்ந்திருந்துமர
ணமடைந்தேன்பின்புநான்புருஷனோடுஎதிர்த்துப்பேசி அவன்மனது
க்குவருத்தம்வரும்படிச்செய்த பாபகர்மத்துக்குத்தக்க நானாவிதநரக

வேதனைகளையனுபவித்து இப்பொழுதுடருவாய்ச்சலிமித்துஎலிடாய நமதாலேந்துவிட்டதென்று சொல்லிமைகானமேடதம்பிராமலேவிட்டது.

ஆகையால் நாயகனுடைய மனசுநோகாமல் நடக்கவேண்டியதன்றோ நம்முடைய கடமையென்று சந்திரியாவளிசொல்ல அதற்குமோகனாங்கியானவள் இவள்சொல்வதெல்லாம் யதார்த்தந்தான் நாமப்படிப்புருஷனுடைய மனம்நோகாமல் நடப்போமேயானால் பரமதேவருடைய கட்டளையை மீறினவளாகிறேனும் இதற்கெல்லைமசம்டலாப் எவ்விதத்திலும் ருக்குமாங்கதமகாராஜனை ஏகாதசிவிரதத்தைத் தவறுகிறவனாக்காணப்படவில்லை அவன்தேவிமார்களும் புத்திரனும் அவனைப்போலவே உறுதியாயிருக்கிறார்கள் நாம் இனிச்சும்மா யிருக்கலாகாது தர்மாங்கதனுடைய தலையையாவது வெட்டித்தரச்சொல்லிப் பெற்றுக்கொள்ளவேண்டுமென்று தனக்குள்ளே தீர்மானித்துக்கொண்டு சந்திரியாவளியைப்பார்த்து மோகனாங்கிசொல்லுகிறாள்.

வாராய் சந்திரியாவளிதேவி நீசொல்வதெல்லாம் யதார்த்தமே இப்போது எனக்குக்கொடுத்திருந்தவரத்தை இன்றைத்தினம் பரிபாலனம்பண்ணக் கேட்டேனேயல்லாமல் அவர் மனம்நோகும்படி நானொன்றுஞ் செய்யவுமில்லை பேசவுமில்லை அப்படி ஸ்ரீஹரித்தினவிரதத்தை உண்மையாக ஆசரிப்பவராயிருந்தால் அதைநடத்துவோம் அவரென்றேனுங் கலவாமற்போனாலும் அவர்குமாரனாகிய தர்மாங்கதனுடைய தலையையாவதுகொடுத்துத் தம்முடையசொல்லைக் காப்பாற்றவாரா இதையாவது அறிந்துவந்து சொல்லம்மாவென்றுசொல்ல அதைக்கேட்டவுடனே நம்முடையபத்திரநாசத்தைக்குறித்து நாமெவ்வளவுந்துக்கிக்கப்போகாது நமதுகணவனுக்குச்சத்துருவாகவேயன்று, ஏகாதசிவிரதபங்கஞ் செய்யாதவொன்றும், பெரியோர்கள் சொல்லுகிற புகழொன்றும், நாசத்தையடையாமலிருந்தால் அதுவே போதுமென்றுதனக்குள்ளே ஆநந்தபாவசமுடையவளாய்த் தர்மாங்கதனையழைத்துக்கொண்டு ருக்குமாங்கதமகாராஜாவினிடத்திற் போய்ச்சேவித்துச் சொல்லுகின்றாள்.

வாராய் என்குலதெய்வமாகிய புருஷசிரேஷ்டரே முற்காலத்திலே சூரியவம்சமகாராஜனாகிய சிபிசக்கரவர்த்தியினுடைய அன்பைச் சோதிக்கும்படி அக்கினிபகவான் புறாவடிவங்கொண்டு அம்புபட்டகாயத்தோடு பறந்துபோய்ச் சக்கரவர்த்தியினுடைய மடியில் விழ அதைஅவரெடுத்துக்காயத்தை ஆற்றிக்கொண்டிருக்குஞ் சமயத்தில் இந்திரபகவான் வேடனைப்போல உருவமெடுத்து வில்லும்அம்

பும் கையில்தாங்கிக்கொண்டு புறாவை வெகுதூரத்திலிருந்து துரத்
தி விடாய்ப்பட்டு வருகின்றவனைப்போலத் தேகமெங்கும்வேர்வை
யொழுக வாயில்வழியாகமூச்சுவிட்டு இளைப்போடு ஓடிவந்து சக்கர
வர்த்தியினுடைய சமூகத்திற்சேர்ந்து வாரீர் உயிர்கள்யாவற்றையும் உம்
முயிரைப்போலநினைத்துப் பரிபாலிக்கின்ற தயாநிதியல்லவோ நான் அநேக
காலம் இந்தப்புறாவுக்காகக் கண்ணிவைத்துக் காத்திருந்தேன் இன்றுதெ
ய்வசங்கல்பத்தாலே என் அம்பினால் தாக்கப்பட்டுப்பறக்கமாட்டா
மல் தப்பிப்பறந்து வந்துசேர்ந்தது இதுஎன்னுடைய நல்லகாலந்தான்
நானோவெகு பசியாயிருக்கிறேன் நீர் இந்தப் பக்ஷியைச் சீக்கிரத்தில் த
யைசெய்வீரானால் அதைச்சுட்டுப்புசித்து என்பிராணனைக் காப்பாற்றி
க்கொள்வேன் இல்லாவிட்டால் இதோ உமக்குமுன்னே தானே என்பிரா
ணன்நீங்கிவிடும்போலிருக்கிறதென்று சொல்லுகின்ற வேடனைப்பார்த்
து சிபிச்சக்கரவர்த்தி சொல்லுகின்றார் வாராய்வேடனே இந்தப்பட்சி
யை நான்விடமாட்டேன் உனக்குவேண்டியஆகாரமுந்தனமுங்கொடுக்
கிறேன்பெற்றுக்கொள் என்றுசொல்ல அந்தவேடன் ஒத்துக்
கொள்ளவில்லை இதன்அளவுக்குத்தக்க என்மாமிசத்தைத்தருகிறேனெ
ன்றுசொன்னமாத்திரத்தில் அந்தவேடன் ஒத்துக்கொண்டான் உடனே
தராசொன்றுவரவழைத்து ஒருதட்டில் புறாவைவைத்து மற்றொருதட்
டில்தன்தேகத்தைச் சேதித்துவைக்கப் புறாஇருக்கின்றதட்டு கனமாக
த்தாழ்ந்திருக்க அதைச் சரிப்படுத்தும்படி தன்னுடலின் சதைஎல்
லாவற்றையும் அறுத்தறுத்துவைக்கவுஞ் சமமாகாதபோது அந்தத்தட்
டில்தாமேஏறிநின்றேறச் சரிப்பட்டது, அப்போது வேடனைப்பார்த்
து என்னைஎடுத்துக்கொண்டு போவென்றுசொன்னவுடனே பிரமருத்
திராதி சமஸ்த தேவர்களும் தங்கள் தங்கள் தேவிமாருடனே வாகன
மேறிப் புடைசூழ்ந்துவர ஸ்ரீசர்வேஸ்வரனானவர் வேதசொரூபியா
கிய கருடபகவான்மேல் எழுந்தருளி அந்தச்சிபிச்சக்கிரவர்த்திக்குப்பிர
சன்னராய்வந்து நிரதிசயானந்த பரமபதத்தைக் கொடுத்தருளினார்.
ஒருகாலத்திலே இந்திரனானவன் ததீசிருஷியினிடத்திற்போய் எனக்
கொருவரங் கொடுத்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க அம்முனிவ
ர் அப்படியே கொடுத்தோம் கேளென்றுசொல்ல அப்போது இந்திர
னானவன் உம்முடைய முதுகெலும்பைக் கொடுப்பீரானால் நான் வச்
சிராயுதஞ்செய்து கொள்வேனென்று சொன்னவுடனே அவர் இந்திர
ன்வேண்டியபடியே தமதுதேகத்தைவிட்டனர் மேலும் ஸ்ரீபகவா
னவர் அசுரமோகனார்த்தமாகச் சில தாமசநூல்களைச்செய்யவென்றுசங்
கரனுக்குக் கட்டளையிட்டருளி உன்னைப் பாவனதுவாக அந்த வேத

பாக்கியர்க்க என்னும்படி நானே உன்னை பூஜிக்கிறேனென்று வரங்கொடுத்து ஸ்ரீராம கிருஷ்ணாதி அவதாரங்களைச் செய்தபோது ஸ்ரீருத்திர பகவானைப்பூஜித்து அந்தவரத்தைப் பாலனஞ்செய்தருளினார்.

ஆகையால் நீர்சத்தியவாக்கியந் தவறாமல் அர்த்தமொழுங்கிக்குக்கொடுத்தவரத்தை விரதபங்கம் வராமல் பாலனஞ்செய்ய வேண்டுமென்று பலவாறாகச்சொல்லி இப்போது அவன்றமது புத்திரனாகிய தர்மாங்கதனுடைய தலையைவெட்டிக்கொடுத்தால் சர்வதீர்ப்பான் ஸ்ரீஹரிவாசர உபவாசமுங் கெடாதென்றுசொன்னமாத்திரத்தில் ருக்குமாங்கத மகாராஜனானவன் புத்திரவாற்சல்லியத்தினால் மெய்சோர்ந்து அந்தக் கரணங்க ளொடுங்கி யாதொருசெயலுமில்லாமல் உயிருண்டோ இல்லையோவென்று யாவருஞ்சந்தேகிக்கும்படிப் பிரமித்திருந்தனன் அதுகண்டு சந்தியாவளியென்னுந் தாயானவளுங் கைத்தியோபசாரங்களைச்செய்ய மூர்ச்சைதெளிந்து சமீபத்திலிருக்கின்றதர்மாங்கதனைப்பார்த்து வாராய்கண்மணியே வாராய் சந்திரவமிசத்திலகமே வாராய் சந்திரவமிச திலகமேவாராய் என்றுயிர்த்துயிரே யென்றழைத்து மார்போடு சேர்த்தழுவி என்னைப்பெற்ற தாயார்களே இந்தவுலகத்திலே புத்திரன்வேண்டுமென எத்தனைபேர் அருந்தவங்களைச்செய்தார்கள் நாங்கள் அப்படிச் சிரமப்படாமல் ஸ்ரீபகவத் சங்கல்பத்தாலே எங்களுக்குப்புத்திரனாக ஜனித்தாய் உன்தாயாருடைய கர்ப்பத்தில் நடந்துகொள்வதற்குப் பதின்மடங்கதிகமாய் அந்தப் பாதகியாகிய மோகனாங்கியினிடத்தில் பக்திசிரத்தையோடு நடந்துகொண்டு வருகின்ற உன்விஷயத்திலேதானோ இந்தத் துன்மார்க்க நினைவு கொண்டாள் வரங்கொடுத்தவன்றானே உன்னுடைய தலையைக் கேட்பவளானோ எப்படி மனந்துணிந்து நாவசையாமல் சொன்னாள் பரமபாகவதர்களாகிய மஹாருஷிகள் பிரமரிஷிகள் ராஜரிஷிகள் முதலியபெரியோர்கள் விஷயத்திலும் மற்றவர்கள் விஷயத்திலும் ஒருதீங்கானசெயலை இதுவரையிலுஞ் செய்துமறியேன் நினைத்துமறியேன் எனக்கும் இப்படிப்பட்ட ஆபத்துசம்பவித்ததோ இதுவும் பகவத்சங்கல்பமேயொழிய வேறன்றென்று வியாகுலப்படுகின்ற பிதாவைப்பார்த்துத் தர்மாங்கதன் சொல்லுகிறான்.

வாரீர் பிதாவே சாஸ்திரஞான சம்பன்னரே உலகத்திலே மூட ஜனங்கள் தாங்கள்செய்த நல்வினை தீவினைக்குத் தக்கபடி ஜன்மத்தை யெடுத்துத் தந்தையென்றும், தாயென்றும், பிள்ளையென்றும்,

ஒருவரை யொருவர் தங்கள் அஞ்ஞானத்தாலே நினைத்துக்கொண்டு க்ஷணகாலமுந் தாங்கள்வாழ்வது இன்னவிதமென்றறியாமல் காமக்குரோத லோபமோக மதமாச்சரியங்களின் வசப்பட்டு ஜனனபாம்பரை விர்த்தியாகும்படிப் பாபகர்மங்களை மேலுமேலுஞ்செய்து பிராரத்துவ கர்மபலனை யனுபவித்து மரணத்தை யடைவர்கள் தத்துவஞானிகள் தேகநிலையைச் செவ்வையாக அறிந்து மண் பெண் பொன் இவற்றின் ஆசைகளைவிட்டொழிந்து சற்சங்கமாகிய பாகவதர்களை யநுசரித்து நித்தியா நித்திய விவேகம்பிறந்து ஸ்ரீஹரியினுடைய குணானுபவத்திலும் கைங்கரியங்களிலுங் காலத்தைக்கழித்து ஸ்ரீபரமபதத்தை யடைவர்கள். இவை யெல்லாவற்றையுந் தாம்செவ்வையாகப் பரிசீலனஞ்செய்தவராக இருந்தும் அநித்தியமாகிய தேகசம்பந்த அபிமானத்தால் என்னைக் குறித்து இப்படித்தாபப்படுவது தகுதியாமோ என் பிரியதாயாகிய அந்த மோகனாங்கி கேட்டபடியே என் தலையைக் கொடுப்பீரோ யானால் உமக்கு விரதபங்கம் வரவொட்டாமல் இறக்கின்ற என்ஜீவனும். ஸ்ரீவைகுந்தத்தையடையும் உமக்கும் விரதத்துக்கும் அவ்விரதத்தால் உமக்கும் சந்தியாவளி முதலிய தாய்மார்களுக்கும் காலமுடிவில் அந்த நித்தியலோகங் கிடையாமற் போகமாட்டாது. மேலுஞ்சத்தியவாக்கியென்னும்பெயர் உமக்கும்பதிவிரதையென்னும் பெயர் என்தாய்க்கும், சற்புத்திரனென்னும்பெயர், எனக்கும் இவ்வுலகத்திலே நெடுநாள் நிற்குமென்று சொல்லுகின்ற தர்மாங்கதனுடையசொல்லால் மனந்தேறி மூவரும் நீராடி ஊர்த்துவபுண்டரங்களைத்தரித்து மந்திரராஜமாகிய திருவஷ்டாக்ஷரத்தைச் செபித்து நித்தியகடனை முடித்துக்கொண்டுவந்து பரிசுத்த ஸ்தானத்திலே நின்று ஸ்ரீபகவந்நாமங்களை யுச்சரித்துச் சந்தியாவளிதேவி ஒருகையால் தர்மாங்கதனுடைய தலையையும் மற்றொரு கையால் அவனுடலையும் இறுகப்பிடித்துக்கொள்ள விதர்ப்பதேசாதிபதியாகிய ருக்குமாங்கதமகாராஜன் மிகவுங்கூர்மையாகியவாளை யுயரவீசிவெட்ட உத்தேசித்தான் விதிசிவாதி சமஸ்த தேவசமூகங்கள் இந்தமகாராஜன் ஏகாதசிவிரதத்தில் வைத்திருக்கும் பக்திசிரத்தையைக் காணும்படி ஆகாயவீதியிலிருந்து பார்த்துக்கொண் டிருந்தார்கள். ருக்குமாங்கதன்வாளை வீசுவதைக்கண்டு மோகனாங்கி எழுந்தோடிவந்து அந்த மகாராஜனுடைய வலதுகையைப் பிடித்துக்கொண்டு சொல்லுகிறாள் வாரீர்சந்திரவம்ச மகாராஜரே உமக்கும் இந்தச் சந்தியாவளிதேவிக்கும் எனக்கும் எவ்வளவு பயபக்தியோடு உபசாரங்களைச் செய்துகொண்டுவந்த புத்திரரத்தினத்தை வெட்டுவதற்குஉமக்கும் பத்துமாதஞ்சுமந்துபெற்

று சந்தியாவளிதேவிக்கும் எப்படிமனந்துணிந்தது பிள்ளையைக்கொல்லுகின்ற மகாகொலைபாதகங்களுக்கு மீளாநரகமுண்டாகுமென்று சாஸ்திரங்கள்சொல்லுமேயானால ஸ்ரீஹரிபக்தனுகவும் சற்குணவிவேகியாகவுமிருக்கிற புத்திரனைக்கொலைசெய்தவர்களுக்கு நரகமுண்டோ இல்லையாவென்று சந்தேகிக்கவும் வேண்டுமோ தனனுயிரைப்போல மன்னுயிரைக் காப்பதன்றோ ராஜநீதி அப்படியிருக்கச் சுயபுத்திரனிடத்திலே எவ்வளவுங் கருணையில்லாமல் கொல்லத்துணிந்தீரோ இதுமகா ஆச்சரியகரமாயிருக்கின்றது தாங்களும் தங்கள் குலமும் நல்ல கதியடைய வேண்டுமென்று எத்தனையோபேர் ஒருபுத்திரனைக் குறித்துத்தவஞ் செய்தவர்கள் புத்திரனுக்குமேற்பட்ட விரதமு முண்டோ என்ன ஆலோசனைசெய்து இந்தகாரியத்தைச் செய்கின்றீர். போதும் போதும் நிறுத்தும் இன்றென்னோடுகலந்து என்னிஷ்டத்தை நிறைவேற்றித் தர்மாங்கதனும் நீரும் சுகஜீவிகளாய் வாழ்ந்திருங்களென்று ருக்குமாங்கதமகாராஜனைப்பார்த்துச் சொல்லுகின்ற மோகனங்கியை சம்சவித்துப் புத்திர சிரேஷ்டனுகிய தர்மாங்கதன் சொல்லுகிறான்.

வாரீர் என்தாயே உம்முடையசொல்லுக்குக் குறுக்குச் சொல்லுகிறேனென்று மனதிலாயாசம்வேண்டாம் குரோதபுத்தியினுல்-பிள்ளையைக் கொலைசெய்தாலன்றோ பாதகம் சகலபாபங்களையும்-நிவர்த்திசெய்யாநின்ற ஸ்ரீஹரிதினமாகிய ஏகாதசி விரதத்தைக்காத்துக்கொள்வதி நிமித்தம் தன் புத்திரனைக்கொன்றால் பாபமுமுண்டோ அந்தக்கொலைக்கு நானே சம்மதித்தபோது பாபமென்பதேது சகல தர்மநீதிகளையு மறிந்திருக்கிறதாயே நீர் சொல்வதுதர்மமோ அதர்மமோ ஆலோசித்துப்பாருமென்று சொல்லிவிடக் குனிந்துநின்றான் குனிந்துநிற்கிற தர்மாங்கதனை அசையவொட்டாமல் சந்தியாவளிதேவி இரண்டு கைகளாலும் முன்போலவே இறுக்கிப்பிடித்தனள். ருக்குமாங்கதமஹாராஜன் ஸ்ரீபரந்தாமனைத் தியானித்துக்கொண்டு வாளாயுதத்தைவீசி வெட்டினான். அந்த வெட்டானது தர்மாங்கதனுடையகழுத்தில் புஷ்பமாலையைப்போல் விழுந்தது, மறுபடியும் மஹாராஜனானவன் வாளைத் தீட்டிக்கொண்டுவெட்ட உயரவெடுத்தான் உடனே சர்வ சுவாமியானவர் அசரீரியாய் வாராய் ருக்குமாங்கதா நீ என்னுடைய தினமாகிய ஏகாதசியை அனுஷ்டிக்கும் விரதத்தை மிகவும் மெச்சினேம் பூலோகத்திலே என்னிடத்தில் யதார்த்த பக்தியுள்ள தாசர்கள் உன்னைவிட வேறேயுண்டோ முத்திசாதனமாகிய இந்தவிரதத்தைத் தாரபுத்திராதிகள் அநுஷ்டிக்கும்படிச் செய்ததுமல்லாமல் சகலதே

சங்களிலும் வியாபிக்கச்செய்த பரமபாகவ தோத்தமனே இதோமாணிக்கமயவிமானம்வருகின்றது அதில் நீயும் சந்தியாவளியும் தர்மாங்கதனும் ஆரோகணித்துக்கொண்டு பரமபதத்துக்குவாருங்கோளென்றுதிருவாய்மலர்ந்தருளினர். ஸ்ரீசர்வேஸ்வரரானவர் திருவாய்மலர்ந்தருளியபடியே அநேககோடி பாலசூரியர்கள் உதையமானாற்போலத் தகத்தகாயமான விமானம் ஒன்றுவந்தது அப்போது சமஸ்ததேவர்களும் தேவதுந்துபி முழங்கச்சுகந்த புஷ்பங்களைத்தூவ அதில்விதற்பதேசராஜனுகிய ருக்குமாங்கத மகாராஜனும் சந்தியாவளியும்-தர்மாங்கதனும் ஏறிக்கொள்ள அக்கினிபகவானும், நக்ஷத்திரங்கள், நாள்கள், மாதங்கள், அயனங்கள், வருஷங்கள், முதலாகிய காலதேவதைகளும், வாயுதேவனும், சூரியசந்திரர்களும், வருணனும், இந்திரனும், சங்கரனும், பிரமனும், கைகளைக்கூப்பிக்கொண்டு வழிகாட்டச் சமஸ்தஅண்டங்களையுங்கடந்து விரசாநதியிற்றோய்ந்து அமானவபுருஷனால்பரிசிக்கப்பட்டு வாசனைநீங்கி திவ்விய தேகத்தைப்பெற்று மீளாக்கதியாகிய வைகுந்தத்தை யடைந்தனர்கள், அந்நகரத்திலும் மற்றத்தேசங்களிலுமுள்ள சற்சனர்கள்யாவரும் ருக்குமாங்கதமகாராஜன் ஏகாதசிவிரதத்தில் வைத்திருந்த பக்திசிரத்தையையும் மோகனுக்கு விஷயத்தில்செய்த சத்தியவாக்குப் பரிபாலனத்தையும் நானாவிதமாகப்புகழ்ந்துக் கொண்டாடினார்கள், பிற்பாடு சந்தியாவளிதவிர மற்றத் தொண்ணூற்றொன்பது தேவிமார்களில் ஒருத்தியினுடைய புத்திரனாகிய தர்மதேவனென்பவன் மகாருஷிகளும் பிராமணோத்தமர்களும் ஆசீர்வசனஞ்சொல்லிப் பட்டாபிஷேக நீரும் அக்ஷதையுந்தூவப் பட்டங்கட்டிக்கொண்டு தர்மாங்கதனைப்போலவே நந்தவன கைங்கரியத்தைப் பாதுகாத்துக்கொண்டு ஸ்ரீஹரிவாசர உபவாசத்தைத் தானும் அனுஷ்டித்துப் புரஜனங்களும் மற்றத் தேசத்தார்களும் ஆசரிக்கச்செய்து மகுடவர்த்தனர்களும் கீழ்ப்படிந்துகப்பங்கட்டச்செங்கோல்செலுத்தி விதற்பதேசத்தை ஆண்டுகொண்டுவந்தனன்.

வீராய் பூபாலகோத்தமனுகிய மருத்துமகாராஜனே அந்தமோகினியானவள் ருக்குமாங்கத மகாராஜன்முதலிய மூவரும்திவ்யமாணிக்கமய விமானத்தில் ஆரோகணஞ்செய்து நிரதிசயானந்த முத்திலோகத்துக் கெழுந்தருளிய மாத்திரத்திலே அதுகண்டு அதிஆச்சரியத்தையடைந்து வெண்ணெய் திரளுகிறசமையத்தில் தாழியுடைந்தாற்போல நம்முடையபிரயத்தனமெல்லாம் வீணாய்முடிந்தது நாமொன்றுநினைக்கத் தெய்வமொன்றுநினைத்ததே இனிநாமென்னசெய்யப்

போகிறோமென்று ஒன்றுந் தோற்றாமல் சற்றே பிரமித்துப் பின்புத
ன்னைத்தானே திடப்படுத்திக்கொண்டு தன்மனதைத்தேற்றித் தனக்கு
ள்ளேதானே எண்ணுகிறாள் சதுர்முகனானவர் நம்மைநோக்கி நீபோய்
ருக்குமாங்கத மகாராஜனுடைய ஏகாதசிவிரதத்தையாவதுபங்கஞ்செ
ய் அல்லது அவன் புத்திரனாகிய தர்மாங்கதனுடைய தலையையாவது
கொண்டுவாவென்று கட்டளையிட நம்முடைய அஞ்ஞானத்தாலேமு
ன்பின் ஆலோசிக்காமல்அப்படியே செய்துவருகிறேனென்று ஒத்து
க்கொண்டுவந்தோமே அவற்றி லொன்றையாவது நிறைவேற்றாமல்அ
பலமாய்ச் சத்தியலோகத்துக்குச்சென்று ருத்திரேந்திராதி சமஸ்த தேவ
சமூகங்களும்நிறைந்திருக்கின்ற சபைக்கும்கதிரோ நாணமில்லாமல் பிர
மதேவரிடத்தில் நீர்சொன்னவற்றில் ஒன்றும் என்னால் முடியவில்லை
யென்று எப்படிச்சொல்லுகின்றது சர்வநியந்தாவாயும் விபுவாயும்வி
ளங்காநின்ற ஸ்ரீபரந்தாமரானவர் சகலாத்மகோடிகளுடைய உஜ்ஜீவ
னார்த்தமாக ஆதிகாலத்தில் பதரிகாச்சிரமத்தில் நரநாராயணர்களாகத்
திருவவதரித்து ஆசாரிய சிஷ்யக்கிரமத்தைக் காட்டியருளவேண்டித்தா
ம் ஆசரித்ததவத்தை விக்கினஞ்செய்ய உத்தேசித்துவந்தமன்மதனை ம
யக்கும்படி ஊர்வசியைச் சிருஷ்டித்தனுப்ப அவள்சென்று பிபீலிகா
தி பர்யந்தமாகியபிராணகோடிகளை மோகிக்கச்செய்கின்ற அந்
தக்காமதேவனானவன் உத்தேசித்துவந்து எண்ணைச்சிறிதும் பயன்ப
டவொட்டாமல் அவனைத் தன்வலையிற் சிக்கச்செய்யவில்லையா, ஒரு
காலத்தில் விசுவாமித்திரரானவர் மகத்தாகியதபத்தைச் செய்வதை
நோக்கி இந்திரபகவான் அதையழிக்கும்படி மேனகையையேவ அவ
ள்போய் அவர்தவத்தைக் கெடுக்கவில்லையா இப்படிச்செய்தவர்க ள
நேகருண்டு நாமொருத்திதானோ நினைத்துவந்தகாரியம் சிறிதும்பலி
க்காமல் நிஷ்பலத்தையடைந்தோம் அல்லது ருக்குமாங்கத மகாராஜ
ன் சென்றவிடத்துக்குச்சென்று நாம்யத்தனித்துவந்த காரியத்தைமு
டித்துக்கொள்வோமென்றால் அந்தஇடம் ஸ்ரீவேதபுருஷனுக்கும் அஜ
சங்கிராதிகளுக்கும் மனோவாக்குக்கெட்டாததாயும், சகலண்டங்களு
க்கும்மேலதாயும், விளங்காநின்ற முத்தியுலகமாச்சே அங்கேசெல்வ
து மகாஅசத்தையாகிய நம்முடையதரமோ இதிருக்கட்டும் தன்புரு
ஷனுடைய கருத்துக்கிசைந்து நடவாமல் அவனிஷ்டத்துக்குமாறாகி
எதிர்த்துப்பேசுகின்ற அதமஸ்திரீக்கு நரகமுண்டோ இல்லையோவெ
ன்றுசந்தேகிக்க வேண்டுவதில்லையென்று பெரியோர்கள் சொல்லுவா
ர்களன்றோ நமக்குஅத்தியந்தப்பிரியனாகவும், விவாகமணவாளனாகவும்,
சத்தியவிரத சீலனாகவும் இருந்த அந்தருக்குமாங்கத மகாராஜனுக்கு

இஷ்டமாய் நடவாமல் அவன்சொல்லுக்கு எதிர்த்துப்பேசினேமே யதனால் என்னபாபஞ் சித்தித்தமோ தெரியவராது. ஸ்ரீசர்வேஸ்வரருடைய விஷயத்தில அபசாரப் பட்டவர்களுக்கு ஒருகாலத்திலும் உஜ்ஜீவனமு முண்டாகலாம் அவருடைய அடியார்களாகிய பாகவதரிடத்தில் அபசாரப்பட்டவர்களுக்கு ஒரு காலத்திலும் உஜ்ஜீவனமுண்டாகாதென்றும் மோக்ஷசாதனமாயும் பரமவைதீகவிரதமாயுமிராநின்ற ஏகாதசிவிரதத்தை யநுஷ்டிக்கின்ற உத்தம புருஷனை அன்றையத்தினத்தில் போஜனஞ்செய்யென்று பலாத்காரஞ்செய்யும் அதமனுக்கு நரகவேதனை சித்திக்காமற் போகமாட்டாதென்றும் இதிகாசபுராணாகமங்கள் கூறுகின்றன. நாமோ அந்தப்பிரம தேவனுடைய கட்டளையைப் பரிபாலனம் பண்ணவேண்டுமென்கிற புத்தியினத்தாலே பரமபாகவதோத்தமனாக விளங்காநின்ற அந்த மகாராஜனை ஏகாதசி விரதம் பங்கப்படும்படி நம்மோடுகலந்து இஷ்டபோகங்களைச் செய்யும்படிச் சொன்னோமே இதற்காக என்ன நரகவேதனை யனுபவிக்கும்படி நேரிமோ ஐயோ நாமொன்றுமறியோமென்று இப்படி நானாவிதமாகக் கிலேசப்பட்டுக்கொண்டிருக்கின்ற மோகனாங்கியைப் பார்த்துப் புரஜனங்கள் கூட்டங்கூட்டமாகவந்து புருஷர்களும் ஸ்திரீகளும் ஒருவர்க்கொருவர்தங்களுக்குள்ளே பேசிக்கொள்ளுகின்றார்கள்.

சிலபுருஷர்கள் வாராய் சிநேகரே இந்தமோகனாங்கி தேவியினுடைய ரூபலாவண்ணிய குணாதிசயங்களைக்குறித்து ஆலோசித்துப்பார்க்குமிடத்தில் பிரமதேவருடைய புத்திரியென்பதற்குச் சந்தேகமில்லையென்றார். சிலர்வாரீர்தோழரே புண்ணியபுருஷசிகாமணியாயும் ஏகாதசிவிரதயோக நிஷ்டனுமாயிருந்த ருக்குமாங்கதமகாராஜனைத் தான் முன்செனனத்திலேசெய்த தபோபலத்தால் தனக்குப் பர்த்தாவாகக் கிடைக்கப்பெற்றிருந்தும் அந்தமகாராஜனுடைய பாதங்களுக்குத் திருத்தொண்டுசெய்து நிரதிசயானந்த முத்தியுலகத்தைப்பெற விரும்பாமல் ஸ்ரீஹரிதினவிரதம் பின்னமாகும்படி அல்பசுகத்தை விரும்பியது என்ன அவிவேகமென்றார் சிலர்வாரீர் பாங்கரே நமதுமகாராஜனுடைய வைதீகவிரதத்தைஅழிக்கநினைத்த இந்த மகாபாதகியைச்சிக்ஷித்தாக நம்முடையஅர்த்தசந்திரவாளாயுதத்துக்குஇரையாக்காமல் சும்மாய்விட்டால்நாம்நம்மகாராஜனிடத்தில்அன்புடையவர்களாவோமோவென்றார். சிலர்வாரீர் துணைவரே ஸ்திரீஹத்திமகாபாதகமென்று சாஸ்திரங்கள்சொல்லுகின்றமையால் வரதினமாகிய இன்றைத்தினத்திலோ நம்முடையமகாராஜனுக்குப்பத்தினியாகிய இவளைக்கொ

லைசெய்து மகாபாதகத்தைச் சம்பாதித்துக்கொள்வதென்றார் சிலஸ்தி
ரீகள்வாரீர்சகிமாரே இவள்பிரமபுத்திரியா யிருப்பதுயதார்த்தமாயிரு
ந்தால் தன்னுடையபுருஷனைத் தெய்வமாகப்பாவித்து அவன் இஷ்டப்
படிநடந்து இன்றுவைதிகவிரதத்தையும் ஆசரித்து நித்யானந்தசுகத்
தையடையக்கோராமல் அந்தவிரதவிக்கினஞ்செய்து அல்பசுகாந்தத்
தை இச்சிப்பாளோ இச்சிக்காள் ஆகையால்இவளாரோ மாயப்பெண்
ணாகத்தோற்றுகின்றாளென்றார். சிலர்வாரீர்தோழிமாரே இவள்இதற்கு
முன்னெல்லாம் நம்முடையமகாராஜனோடு ஸ்ரீவாசரஉபவாசத்தை அ
நுஷ்டித்துக்கொண்டுவந்ததற்குச் சந்தேகமில்லையன்றோஅப்படியிரு
க்கஇவளுக்கேன் ஸ்ரீவைகுந்தங் கிடையாமற்போகச்சென்றார். சிலர் அ
துகேட்டு வாரீர்பாங்கிமாரே இவள்ஏகாதசிவிரதத்தை முன்னே ஆசரி
த்தவளாக இருந்தபோதினும் இன்று அந்தவிரதத்தைத் தானும்அநுஷ்
டிக்காமல் மகாராஜனுடையவிரதத்தைப் பழுதுசெய்யநினைத்த கொ
டியபாதகத்தால் நரகசித்தியேயல்லாமல் வேறேஎன்னபிராப்தமாகப்
போகின்றதென்றார்.

இந்தப்பிரகாரம் அந்தநகரத்துப்புருஷர்களும் ஸ்திரீகளுந்தங்
கள்தங்களுக்குத்தோற்றியபடிப்பேசிக்கொள்வதைஅந்த மோகனாங்
யானவள்கேட்டு மிகவும்இலச்சையும் தான்செய்தஅக்கிரமத்தினிமித்த
ங் கொல்வார்களென்கிற பயமும்உடையவளாய் இனிஇவ்விடத்திலிரு
ப்பது நமக்குயோக்கியமன்று சீக்கிரத்தில்புறப்பட்டுப் பிரமலோகத்
தையடையவேண்டுமென்று கருதிப்புறப்பட்டுச் செல்லுகின்றமோக
னாங்கியை ருக்குமாங்கதனுடைய கனிஷ்டபுத்திரனாகிய தர்மதேயனெ
ன்பவன்ஓடிவந்து சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து வாரீர்தா
யே மகாராஜனில்லாமையால் இங்கேஇனிநமக்கென்ன விருக்கின்றது
நம்மை உபசாரங்களைச்செய்துசம்ரக்ஷணைஞ்செய்கின்றவர்கள்யாரிருக்
கிறார்களென்றுநினைத்தோ நீர்போகத் துணிவுகொண்டது தர்மதேய
னென்கிறஒருபுத்திரன் நமக்கிருக்கும்போதுஎன்னகுறைவுநேரிடுமெ
ன்று தம்முடையதிருவுளத்திலே நினையாததற்குக்காரணம்யாதோஅல்
லது தம்முடையவிஷயத்தில் அடியேன்ஏதேனுந்திங்கு செய்த துண்
டோ. வாரீர்மாதாவேஎன்னுடைய பிதாவுக்குந்தாய்க்கும் பதிலாகத்
தாமிருந்து இந்தச்சிறியனாகியஎனக்கு வேண்டியதர்மநீதிகளைச்சொல்
லிக்கொண்டு அடியேனைக்காப்பாற்றலாகாதோ தம்முடையபுத்திரனா
கிய என்னை அந்நியமாய்நினைத்துக் கைவிட்டுப்போகலாமோருக்குமா
ங்கதமகாராஜனுடைய சம்பத்தெல்லாம் தம்முடையசம்பத்தே நாங்
களெல்லோரும்தம்முடைய ஏவலாளர்களேயல்லது வேறல்ல இதற்

குத்தாம் எவ்வளவுஞ்சந்தேகிக்கவேண்டாமென்று கைகளைக் கூப்பிக் கொண்டு சொல்லுகின்ற தர்மநேயனைப்பார்த்து மோகனாங்கி சொல்லுகின்றாள்.

வாராய் பரமவைதீகநிஷ்டசத்தியகுணசீலனுடைய புத்திரனாகிய தர்மநேயா உன்பிதாவாகியருக்குமாங்கதமகாராஜனையும் தாயாகியசந்தியாவளிதேவியையும், பிராதாவாகிய தர்மாங்கதனையும், உங்களைவிட்டுப்பிரியும்படித் துராகதஞ்செய்தமகாபாதகியைத்தாயென்றுஉன்றாவுகூசாமல்அழைக்கவும்மனம்வந்ததோஎன்னப்பனேசஜ்ஜனபூஷணமே ஸ்ரீஹரிவாசரஉபவாசவிரதிகளுக்கு ஸ்ரீசர்வேஸ்வரருடைய கடாக்ஷவீக்ஷணத்தால் யாதொருதீங்கும்நேரிடாது பிரமசங்கராதிதேவர்கள் ஒருசங்கடத்தைச்செய்ய நினைத்தபோதினும்அந்தச்சங்கடமானது ஸ்ரீகமலாக்ஷருடையகருணை இலேசமாத்திரத்தால்சூரியோதயத்தைக்கண்டபனிக்கூட்டம்போல நீங்கிவிடும்நீங்கள்யாவரும்ஸ்ரீபகவானுடையஉபயசரணாரவிந்தங்களில்அத்தியந்தம்பிரீதியுடையவர்களாய்ஏகாதசிவிரதத்தையநுஷ்டிக்கில் நீர்கள் அப்படிப்பட்ட பரிசுத்தவிரதநிஷ்டர்களாகியஉங்களுக்கும்ஒருதீங்குநேரிட்டு வருத்தப்படுத்துமா, இருப்புத்தூணையுஞ்செல்லரிக்குமா கேளாய்சந்திரகுலபூமானே நீங்கள்யாவரும் ஸ்ரீமுகுந்தருடையகடாக்ஷத்தைப்பெற்றவர்களென்றுமூடமதியாகிய நான்இவ்வளவில்திரித்துச்சொல்வானேன் இப்போதுஉன்பிதாவிஷயத்தில்நடந்தஅற்புதமொன்றேபோதுமானதன்றோஎமதர்மராஜனானவன்ஸ்ரீகயிலாசத்தில்பரமசிவனைவணங்கி வாராய்ஸ்ரீருத்திரபகவானே பூலோகத்தில் ருக்குமாங்கதமகாராஜனென்பவன் ஸ்ரீஹரிதின உபவாசத்தைத்தானும் அநுஷ்டித்துத் தன்குடையின்கீழுள்ள சகலதேசத்து ஜனங்களும் ஆசரிக்கச்செய்து நாகங்களைப்பாழாக்கினனென்றுமுறையிட அது கேட்டு அந்தச்சம்புமூர்த்தி மிருத்தியுதேவனை அழைத்துக்கொண்டே கம்மேருவி லெழுந்தருளியிராநின்ற சதுர்முகனிடத்திற்போய் வணங்கிச்சொல்ல அந்தப்பிர்மாவானவர் என்னைச்சிருஷ்டித்து நீபோய் ருக்குமாங்கத மகாராஜனுடைய ஏகாதசிவிரதத்தைப் பங்கஞ்செய்அதற்கு அவனிசையாவிட்டால் அவன் புத்திரனுடைய தலையைவெட்டித்தரச்சொல்லிக்கேளென்று என்னையனுப்பினார் அவர் சொல்லைப் பரிபாலனஞ் செய்வதினிமித்தம் பதினான்குவருஷகாலமாய்ச் சமயம்பார்த்திருந்து இன்றையத்தினம்என்னுடையகருத்தை நிறைவேற்ற யத்தனித்து மகாபாதகங்களைச் சம்பாதித்துக்கொண்டேன் அக்கொடிய பாபத்தை நீக்கிக்கொள்ளும் உபாயத்தைப் பிரமதேவரிடத்திற் சென்று கேட்டுக் கொள்ளப்போகிறேன் ஆகையால் நீஎன்னை அடங்கப்படுத்த

வேண்டாமென்று தர்மதேவனிடத்தில் செலவுபெற்றுக்கொண்டு விதர்ப்பதேசத்தின் ராஜவீதியில்மோகனாங்கியானவள் போகாநிற்கையில் அங்கங்குள்ள சற்சனர்களியாவரும் அவளைக்கண்டு ஏகாதசிவிரதத்தையழிக்க நினைத்தசண்டாளஸ்திரீ வருகின்றாள் அவள்முகத்தில்விழித்தாலும் நமக்கும்அந்தப்பாதகஞ் சுற்றிக்கொள்ளுமென்று நிந்தித்து எங்குஞ்சேரவொட்டாமல் துரத்தினார்கள் அங்கிருந்துவாயுவேகமும்பின்னிடும்படியோடக் காட்டுவழியே செல்லுகையில் அவ்வாரணியத்தில் வாசஞ்செய்கின்ற யோகீஸ்வரர்களும் இந்தத்துன்மார்க்கஸ்திரீயை கண்ணுற் கண்டால் பாபஞ் சம்பவிக்குமென்று திக்கு விதிக்குகளிலோடி மலைக்குகைகளிலும் பெருமரத்துவாரங்களிலும் ஒளித்துக்கொண்டார்கள். இதுகளையெல்லாங்கண்டு அதிகக்லேசத்தோடு விரைந்து போகும்போது வேடர்கள் இவளைப்பார்த்துக் கிஞ்சித்தாயினுங்கருணையில்லாமல் இவளுடையவஸ்திராபரணங்களைக் கொள்ளையிடவும் ஆலிங்கனாதிகள் செய்யவும் நினைத்துக்கிட்டிவந்தனர்கள் உடனே மோகனாங்கிபயந்து ககனமார்க்கத்திலேயெழும்பிபிரமதேவருடைய இருப்பிடத்துக்குச்சென்று தண்டாகாரமாகப் பிரணாமஞ்செய்து வாரீர் சிருஷ்டிகர்த்தாவே உம்முடைய வாக்கின்படிப்போய்ப் பாவதோத்தமனாகிய ருக்குமாங்கதமகாராஜன் விஷயத்தில்செய்த அபசாரமும் ஏகாதசிவிரதத்தையழிக்க நினைத்தமகாபாதகமும் ஆகியஇரண்டையுஞ் சம்பாதித்துக்கொண்டு வந்தேனேயல்லாமல் வேறொருலாபத்தையும் பெறவில்லையென்று முறையிட்டுத்துக்கித்துக் கொண்டிருக்குஞ்சமையத்தில் பாசமுந்தண்டமுங் கைகளில்தாங்கிக்கொண்டு யமன்வந்து வாராய்மோகனாங்கி எனக்குஇதஞ்செய்யும்பொருட்டு ருக்குமாங்கத மகாராஜனிடத்தில் சென்றவளாயிருப்பினும் நீ அங்குபோய்ச்செய்த பாபத்துக்காகக் கொடியநரகவேதனைகளை யனுபவிக்கவேண்டும் நாங்கள்யாவரும் ஸ்ரீசர்வேஸ்வரருடைய கட்டளையைச்சிரசாவகித்துக்கொண்டு நடக்கின்றவர்களேயொழிய ஒருவர்பாபத்தை மன்னித்துவிடச் சுதந்தரர்களன்று ஆகையால் நீ நரகத்துக்கு வரவேண்டுமென்றுசொல்லிப் பாசத்தாலிறுக்கிக்கட்டித் தன்புரிக்குக்கொண்டுபோய் நரகங்களில் தள்ளிவிட்டனன். அந்நரகங்களில் வசிக்கின்றபாபிஷ்டர்கள் அவளைக்கண்டு பேசுகின்றார்கள் நாம் ஒருவன்செய்தநன்றியைமறத்தலும், பரதாரகமனஞ்செய்தலும், அடைக்கலமென்று நம்பிவைத்தவருடைய பொருள்களையபகரித்தலும், பெரியோர்களைநிந்தித்தலும், முதலியபாபங்களில் சிலவற்றைச்செய்தவர்களாயும் பல

வற்றைச் செய்தவர்களாயுமிருந்து அவற்றிற்குத்தக்க வேதனைகளைப்ப
டுகின்றோம். இந்தக்கொடியபாவி தனக்குநாயகனாகவும் பரமபாகவத
னாகவுமிருந்த ருக்குமாங்கதமகாராஜனுடைய சொல்லுக்கு மாறாகப்
பேசி அபசாரத்தைப்பெற்றுக்கொண்டதுமல்லாமல் அம்மகாராஜன்
ஆசரிக்கின்ற ஏகாதசிவிரதத்தைக் கெடுப்பதற்குநினைத்த மகாபாபமு
ஞ் செய்திருக்கின்றாள் இவளுக்குச்சமீபத்தி லிருக்கலாகாது துஷ்டச
கவாசத்தாலும் பாபம்நேரிடுகிற துண்டன்றோ ஆதலால் இவளைநெ
ருங்கலாகாதென்று தூரத்திலொதுங்கிநின்றார்கள் அந்த நரகவாசிகள்
தன்னைவிட்டுத் தூரத்தில் நீங்கிப்போகிறதைப் பார்த்து இவர்களும்
அருவருக்கும்படியாகிய பாவியா யிருக்கிறேமே யென்று மனோச
ஞ்சலத்தோடு நரகவேதனையை வெகுகாலம் அனுபவித்துப் பின்புபி
ரமலோகத்தை யடைந்து வாரீர்சதுர்முகரே நான்செய்த மகாபாதக
த்துக்குத்தக்கநரகங்களையும் அனுபவித்தாச்சுது இனிஎனக்கென்னகதி
யென்று வணங்கிக் கேட்டுக்கொண்டிருந்தனள்.

இவள்இங்கேயிப்படியிருக்க ருக்குமாங்கதமகாராஜன்விதற்பதே
சத்தை ஆண்டுகொண்டிருக்குங் காலத்திலே தவத்திற்குச்சென்ற ஒரு
பிராமணோத்தமரானவர் நெடுநாள்களுக்குப்பின் தம்முடைய தவத்
தை நிறைவேற்றிக்கொண்டு ருக்குமாங்கத மகாராஜன் ஸ்ரீவைஷ்ணவ
வைதிகநிஷ்டனன்றோ அவனை முதலிலேபோய்க் காணுவோமென்று
அதிகுதூகலத்தை யுடையவராய்வந்து ருக்குமாங்கத மகாராஜனுடை
ய செய்திகளை யெல்லாந் தர்மநேயனால் கேள்விப்பட்டு ஸ்ரீஹரிதின
உபவாசத்தை விக்கினஞ்செய்ய யத்தனித்தமோகனாங்கியைஇதோசா
ம்பலாய்ப் போகும்படிச் சபிக்கிறேனென்று சாபமிட்டனர். இதை
யறிந்து பிரமன்முதலான தேவர்கள்வந்து அந்தப்பிராமணரைப் பா
ர்த்து வாரீர்யோகீஸ்வரரே அந்த மோகனாங்கியானவள் எம்முடைய
சொல்லைக்கேட்டு- அச்சொல்லின்படி நடத்தவேண்டுமென்னும் எண்
ணத்தினால் விரதராஜமாகிய ஏகாதசிவிரதத்தை விக்கினஞ்செய்ய யத்
தனித்தாளே யல்லாமல் அவளுடைய மனப்பூர்வமாய் அக்காரியத்தி
ல் பிரவேசித்தவளல்லள் அப்படியிருந்தபோதினும் அதற்காகநரகது
ன்பங்களையும் அநுபவித்துவிட்டுவந்தாள். ஆதலால் அவள்மீதுகருணை
கூர்ந்து காப்பாற்றுமென்று வேண்டிக்கொள்ள அத்தேவர்களுடைய
வேண்டுகையை அங்கீகரித்து அப்பிராமணோத்தமர் சொல்லுகின்றார்.
வாருங்கோள்தேவர்களே நானிட்டசாபமோ வியர்த்தமாய்ப்போகா
து ஆயினும் அந்தப்பாதகியி னுடையதேகம் நாசத்தையடையாமல்
உடம்புமுழுமையும் சாம்பல்தோற்றமாகக் கடவதென்று அநுக்கிரகி

த்தனர், உடனே மோகனாங்கிக்கு ரூபசௌந்தரியங்கள் நீங்கி- வெண்குஷ்ட வியாதியைப்போல உடல் வெளுத்துவிட்டது, தேவர்களெல்லாரும்பிராமணோத்தமனை நீங்கிப்போனபின்பு மோகனாங்கியானவள் பிரமதேவனைப்பார்த்து உம்முடையசொல்லைக்கேட்டு நடந்தினாலே சுவர்க்கமத்திய பாதாளலோகத்தார்களும் என்னை எங்குஞ் சேரவொட்டாமல் சீசீயென்று துரத்தும்படியான மகாபாதகத்தைச்சம்பாதித்துக் கொண்டேன் நரகங்களையும் அநுபவித்துச் சாபத்தையும் பெற்றேன் எனக்கு ஏதேனுமொருதிவ்வியவரத்தைக் கொடுக்கலாகாதாவென்று அதிக துக்காக்கிராந்தையாய்ச் சொல்லுகிறாள்.

வாரீர்பிரமதேவரே ருத்திரேந்திராதி தேவர்களே நீங்கள்யாவரும் அநுஷ்டிக்காநின்ற சதுர்விதபுருஷார்த்த சாதனமாகிய ஏகாதசியினிமித்தமே நான் பிறந்தவளாகையால் தசமிதிதி ஒருநாழிகை அரைநாழிகை கால்நாழிகை கலந்த ஏகாதசி விரதபலத்தையும், அப்படிப்பட்ட துவாதசிபலத்தையும், தயைசெய்வீர்களானால் நரகவேதனைகளை யநுபவித்தும் தீராத மகாபாதகத்தைத்தொலைத்துச் சுகப்படுவேனென்றுகேட்க, அதற்குத் தேவர்கள் அந்தப்பலனைமுன்னமே ஒருபிர்மராக்ஷசிக்குக் கொடுத்திருக்கிறோமென்றுசொல்ல, அதுகேட்டுமோகனாங்கி சொல்லுகின்றாள். வாருங்கோள் தேவர்களே ருக்குமாங்கத மகாராஜனுடையஏகாதசிவிரதத்திற்கு விக்கினந்தேடப்போய்நான்சம்பாதித்துக்கொண்ட குரூரமான பாபத்தினாலன்றோ நரகத்திலிருப்பவர்களும் என்னைக் கொடியபாவியென்றுவிட்டுத் தூரமாகவிலக்கினார்கள் அப்படிப்பட்ட பாவந்தீரும்வகை வேறே இன்னமொன் றிருக்கின்றது அதென்னவென்றால் சூரியோதயத்துக்குமுன்னமே கோபாலர்கள் பசுக்களைமேய்புலத்துக்கு ஓட்டிச்செல்லுகிற நேரத்தில் தசமி ஐம்பத்தைந்து நாழிகைமுதல் அறுபதுநாழிகை வரையுமிருந்த மறுநாள் ஏகாதசிவிரதம்- ஆசரிக்கிற பலனையும் அதற்குமறுநாள் துவாதசி பலனையும் அடியேனுக்குக் கொடுத்தருளுமென்றுசாஷ்டாங்கமாகவிழுந்து சேவித்தனள். அப்போது சகலதேவர்களும் மனமிரங்கிஅப்படியே தந்தோமென்று வரங்கொடுத்தனர்கள். யமனானவர் என்னுடைய நரகத்தில் பாழ்பட்டுக்கிடக்கின்ற நரகங்களைவிர்த்திசெய்து என் அபீஷ்டத்தை நிறைவேற்ற வெகு இடுக்கண்களையநுபவித்தமோகனாங்கியே மேற்சொன்ன ஏகாதசி துவாதசிபலனைப்பெற்றுக்கொண்டு சுகஜீவியாய் வாழக்கடவாயென்று வாழ்த்தித் தமதுபுரிக்குச்சென்றனர். ஸ்ரீருத்திரபகவான் முதலிய சமஸ்ததேவர்களும்மேருமலை யில்நின்றும் தங்கள் தங்கள் இருப்பிடத்துக்குச் சென்றார்கள். மோகனா

ங்கியானவள் தான் வரம்பெற்றுக்கொண்ட தசமிவேதையுள்ள ஏகாதசியிலும், ஏகாதசி வேதையுள்ள துவாதசியிலும், வசித்துக்கொண்டு அந்தவிரதங்களை ஆசரிக்கும்பலன்களைத்தானே வநுபவித்து வருகின்றனள்.

வாராய் மருத்தமகாராஜனே மேற்சொல்லிய தசமிவேதையில்லாத ஸ்ரீஹரிதினே உபவாசத்தை ஆசரித்து அந்தமுறையே- துவாதசி கால்நாழிகைக்குக் குறையாமல் ஒரு நாழிகைவரையும் சேஷமிருந்தால்போதும் அந்தத் திரையோதசியிலே சேஷத்துவாதசியில் பாரணை செய்யலாம், தசமி-ஏகாதசி-துவாதசி-இந்த மூன்றுதினங்களும் ஸ்திரீ சங்கமத்தையும் தாம்பூலமுதலிய காமியவஸ்துக்களையும், அவற்றில் முதல்நாள் ஒருவேளைப்போஜனமும், இரண்டாநாள் இரண்டுவேளைப்போஜனமும், மூன்றுநாள் ஒருவேளைப்போஜனமும், ஆகநான்கு வேளைப் போஜனங்களையுந்நீக்கி ஸ்ரீஹரி நாமசங்கீர்த்தனஞ்செய்துகொண்டே ஏகாதசிமுழுமையுந் துவாதசிப்பகலிலும் நித்திரையில்லாமலிருந்து ஸ்ரீஹரிவாசரம் ஸ்ரீஹரிதினம் பரமவைதிக விரதராஜமென்றுசொல்லப்படும் ஏகாதசிவிரதத்தை ஆசரிப்பவர்கள் இம்மையில்தர்மார்த்தகாமங்களைத் தாங்கள் வேண்டியபடியே யடைந்துகொண்ட பெண்டிர்மக்களோடுசுகஜீவிகளாய் நெடுநாள்வாழ்ந்து முடிவிலேமுடிவில்லாத நித்தியானந்தமயமாகிய ஸ்ரீபரமபதத்தைப் பெறுவார்கள். இந்தவைதிகவிரதத்தைச் சாதுர் வர்ணத்தார்களில் எட்டுவயதுக்கு மேற்பட்டயாவரும் ஆசரிக்கலாம். அநுஷ்டிப்பவர்களில் கர்ப்பிணியானவள் பச்சைமாவைத் தன்னிச்சையின்படிபட்சிக்கலாம் அசுத்தையாயிருப்பினும் அநுஷ்டிக்கலாம். வியாதியஸ்தர்கள் இந்தப்பரமவைதிக விரதராஜத்தைத் தங்களால் ஆசரிக்கமுடியாமற்போயினால் தம்முடைய பந்துக்களில் யாரையேனுந் தங்கள்நிமித்தம் ஆசரிக்கும்படிவைக்கலாம், இப்போது உனக்குச்சொல்லிக்கொண்டுவந்தஸ்ரீருக்குமாங்கத ஏகாதசிசரித்திரத்தைச் சிரத்தையோடு படிப்பவர்களும், அந்நிய சிந்தையில்லாமல் கேட்பவர்களும், ஸ்ரீசர்வேஸ்வரராகிய ஸ்ரீகிருஷ்ணகடாக்ஷத்தினால் இகலோக பரலோக சௌக்கியங்களை அநுபவித்துத்தீர்க்காயுசைப்பெற்றுவாழ்வார்களென்று ஆசீர்வசனம்பண்ணி வசிஷ்டமஹாமுனிவர் மருத்துமகாராஜனுக்குச் சொல்லியருளினர்.

ருக்குமாங்கத ஏகாதசிசரித்திரம்-முற்றிற்று.

---

ஸ்ரீவசிஷ்டாயநம:

ஸ்ரீருக்குமாங்கதன் திருவடிகளேசரணம்.

ஸ்ரீபராங்குசாயநம:.

# அம்பரீஷதுர்வாசசரித்திரம்.

ஸ்ரீசர்வேஸ்வரருடைய திருவுந்தியி லவதரித்த சதுர்முகனவர் தருப்பையைப்புல்லைச் சக்கராகாரமாகச்செய்து அதனைச்செலுத்த அது சென்ற இடமாதலால் நைமிசாரணியமென்று சொல்லப்படுவனத்தில் சௌனகர்முதலாகிய ருஷிகள் ஸ்ரீபரந்தாமருடைய சகஸ்ரநாமங்களையுச்சரித்துச் சத்திரயாகஞ்செய்தார்கள் அந்தச் சமையத்தில் நெற்றிமுதலிய பன்னிரண்டிடங்களிலுந் திருமண்பிரகாசிக்கமார்பில் யக்ஞோபவீதமுந் துளசியணிந்தாமரைமணியும் பத்மாக்ஷமாலையும் அசைந்தாட ஸ்ரீராமதாரகமந்த்ரத்தை உச்சரித்துக்கொண்டு ஸ்ரீஉமேஸ்வரனைப்போலச் சூதபௌராணிகர் எழுந்தருளினர். அவரையுயர்ந்த ஆசனத்தி லெழுந்தருளச்செய்து முனிவர்களனைவரும் ஒவ்வொருவருக்கும் அவ்வாறாகிய பதினெண்புராணங்களையும் அறிந்த ஞானவிற்பன்னரே ஷாட்குண்ணிய பரப்பிரமமானவர் தம்முடைய திருவடியைத்தஞ்சமெனப்பற்றினவர்களுக்கும், தம்மை வைத்தவருக்குந்தம்மோடே திர்த்துப்போர்செய்தவர்களுக்கும், நிரதிசயானந்தமுத்தியைத்தமது ஜாயமானகடாக்ஷத்தினால் தரச்செய்யும்படி தேவகியினுடையவயிற்றில் தம்மிச்சையால் திருவவதாரஞ்செய்தனரென்றே அவ்வேத முதல்வனுடைய திவ்யசரித்திரத்தைச்சொல்லி எங்கள்யாவரையும் முத்திக்கரையேற்றுவிக்கவேண்டுமெனப் பிரார்த்திக்கின்ற நைமிசாரணியவாசிகளாகிய முனிவர்களைப்பார்த்துச் சூதபௌராணிகர்சொல்லுகிறார். ஜனன சமுத்திரத்தைக்கடந்து முத்திக்கரையைச் சேர்வதற்கு ஓடமாகிய ஸ்ரீகிருஷ்ணசரித்திரத்தைச் சொல்லுதல் அஜசங்கரர்களாலு முடியாதென்றால் என்னால் முடியுமோ ஆயினும் ஸ்ரீவேதவியாசபகவானுடைய கடாக்ஷ வீக்ஷணத்தால் சிறிதுசொல்லுகிறேன் கேளுங்கோள் முனிவர்களே சரஸ்வதிநதிதீரத்திலே ஸ்ரீவேதவியாசமுனீந்திரர் உலகத்தாருடைய மனந்தெளியும்படி வேதங்களைவகுத்துப் புராணநூல்களைப் பாரதத்தைச்சொன்னோம் யாதுகாரணத்தினாலோ நம்முடைய இருதயந் தெளிவையடையவில்லையென்று நினைத்துக்கொண்டிருக்குஞ்சமயத்தில் நாரதபகவானெழுந்தருளினார். அவரைப்பார்த்து இதைச்சொல்ல அம்முனிவர் ஸ்ரீசர்வேஸ்வரருடைய திவ்யசரித்திரத்தைச் சொன்னாலல்லாமல் உம்முடையமனந்தெளிவையடையமாட்டாதென்றுசொல்ல அப்படியே ஸ்ரீஹரியினுடைய சரித்திரத்தை

த்தமது திருக்குமாரராகிய சுகப்பிரமருஷிக்குப்பிரசாதித்தருளினார் அவர் அபிமன்னியபுத்திரனாகிய பரீக்ஷித்துமகாராஜனுக்குச் சொல்லியருளினார்.

ஸ்ரீசுகர்வாக்கியம்.

வாராய்பரீக்ஷித்துமகாராஜனே நபகனுடையபுத்திரனாகியநாபாகன்குருகுலத்திலே வாசம் பண்ணிக்கொண்டிருக்குஞ் சமயத்திலே அவனுடைய பிராதாக்கள் அவனை நயிஷ்டிக பிரமசாரியென்று நினைத்துக்கொண்டு தாங்கள்மாத்திரமே தங்கள்பிதிரார்ச்சிதமாகியதனத்தைப் பங்கிட்டுக்கொண்டார்கள். பிற்பாடுவித்துவானாகிய நாபாகனானவன்குருகுலத்திலிருந்துவந்துதன் அண்ணன்மார்களைத்தன்பாகத்தைக்கேட்க அவர்கள் உனக்குப்பிதாவைப்பாகமாகவைத்திருக்கிறோமென்று சொன்னார்கள். அந்தவார்த்தையைப் பிதாவினிடத்திலேசொல்ல அதற்குப் பிதாவானவர்நகைத்து வாராய்சத்தியவிரதனாகியநாயகனே அவர்கள் சொல்லை யதார்த்தமென்றுநம்பவேண்டாம் உன்னைவஞ்சித்தார்கள் ஆயினும்அவர்கள்என்னை உனக்குப்பாகமாகவைத்தபடியினாலே நான்உனக்குச்சீவனோபாயத்தை உபதேசிக்கிறேன்கேளாய் இப்போது அங்கிரசருஷிகள் சத்திரயாகம்பண்ணுகிறார்கள் அந்தயாகத்திலேஆறுநாள் செய்யும் வைதிககர்மத்தில் சொல்லவேண்டிய வேதபாகம் இன்னதென்றறியாமல் மயங்கியிருக்கிறார்கள். அந்தயோகீஸ்வரர்களுக்குவைசுவதேவசூத்திரங்களிரண்டையும்நீபோய்பாடஞ்செய்வித்தால்அந்தஉபகாரத்துக்காக அவர்கள்சத்திரயாகஞ்செய்துமுடித்துமீந்ததனத்தை உனக்கேகொடுப்பார்கள் ஆகையால்அவர்களிடத்துக்கு நீபோவென்று சொல்ல அதுகேட்டுநாயகனானவன் அந்தஅங்கிரசருஷிகளிடத்திற்குப் போய் அப்படியேசெய்தான். அங்கிரசுக்களும் யாகத்தைமுடித்து அங்குமீதியானதனத்தை நாபாகனுக்குக்கொடுத்துவிட்டுச்சுவர்க்கத்தை அடைந்தார்கள்.

அதிகசந்துஷ்டனாய் அங்கிருந்த தனத்தை[எடுத்துக்]கொண்டுபோகாநின்ற நாபாகனிடத்திலே கறுத்துஞ்சிவந்துமிருக்கிற நிறத்தையுடையஒருபுருஷனானவன் வடதிசையிலிருந்தோடிவந்துஇந்தயாகவஸ்துக்களிலேஇருக்கிறதனமெல்லாம் என்னுடையதென்றுதடுக்க அதற்கு நாபாகனானவன் ருஷிகள்எனக்குக் கொடுத்தார்களே யென்றுசொல்ல அதுகேட்டு அந்தகிருஷ்ணபிங்களவர்ணனாகிய புருஷன்உன்னுடைய பிதாவைக்கேட்டறிந்துகொள்ளென்ன அப்படியே நாபாகனானவன்போய்த் தன்பிதாவைக்கேட்க அந்தநாபாகனானவன் சொல்லுகிறான். வாராய்புத்திரனே தேவர்களோடுசமமாக அவிர்ப்பாகமுண்ணக்கூடாதுயாகமுடிந்தபின்

னே மீந்திருப்பதைஉன்னைக்கடவதென்று ஸ்ரீசங்கரபகவான் தக்ஷப்பி ரசாபதியினால் சபிக்கப்பட்டதுமுதல் வைதிகபரமருஷிகள் யாவரும் யாகத்திலேமீந்துபோன தனங்களெல்லாம் அந்தச்சங்கரபகவானுடைய பாகமாகமுன்னமே செய்திருக்கிறார்கள் ஆதலால்கறுத்துச்சவந்திரு க்கிற புருஷினே அதற்கு உடையவனென்றுசொல்ல நாபாகனும்அந்த ப்புருஷனண்டைவந்து பிரணாமஞ்செய்துவாராய்பிர்மநிஷ்டராகிய ஸ்ரீருத்திரபகவானே இந்தத்தனமெல்லாம் உம்முடையதேயல்லாமல் என்பிதாவானவர்சொன்னார் என்னைக்ஷமிக்கவேண்டுமென்று பிரார்த்திக் க அந்தநாபாகனைப்பார்த்து வாராய்நாபாகனே உன்னுடையபிதாசொ ன்ன தர்மத்தைநீயதார்த்தமாகவே சொன்னபடியால் எப்படிப்பட்ட ஆபத்துவந்தபோதிலும் அசத்தியத்தைச் சொல்லாமலிருக்கக்கடவாய் இந்தத்தனத்தையும் நீயே எடுத்துக்கொண்டுபோவென்றுசொல்லிச் சத்தியவத்சலனாகிய ஸ்ரீபரமசிவனானவர் அந்தரத்தானமாயினார் இந்த நாபாகஉபாக்கியானத்தை எவன்பிராதகாலத்திலும் சாயங்காலத்திலும் சித்தசமாதானத்தோடுஸ்மரிக்கிறானோ அவன்மந்திரநிபுணனாகவும்மெ ய்ஞ்ஞானியாகவும் சீவித்திருந்து உத்தமானகதியையடைவான். அந்த நாபாகனுக்கு அவன்செய்ததபோபலத்தால் ஸ்ரீஹரியினிடத்திலேயே பாரதந்திரஞானமுடைய பாகவதோத்தமனாகிய அம்பரீஷனென்கிற ருபுத்திரனுண்டானான். அந்தப்புத்திரனைப் பிர்மருத்திரர்களிடத்திலு ம் வியர்த்தமாகாத பிர்மசாபமானது தீண்டாமற்போய்விட்டதென் றுசொல்லுகின்ற சுகப்பிர்மருஷியைப்பார்த்துப் பரீக்ஷித்துமகாரா ஜன் சொல்லுகிறான்.

வாரீர் முனீந்திரரே ஒருவராலும் அதிக்கிரமிக்கக்கூடாதபிர்மசா பமானது எந்தப்புருஷசிரேஷ்டரிடத்திலே காரியகரமாகாமற்போ ச்சோ அந்தஅம்பரீஷருடைய திவ்வியசரித்திரத்தைச் சொல்லியருள வேண்டுமென்று பிரார்த்தியாநின்ற பரீக்ஷித்துவைப்பார்த்து ஸ்ரீசுகப் பிர்மருஷியானவர் சொல்லுகிறார்.

வாராய் அபிமன்னியபுத்திரனே மகாநுபாவனாகிய அம்பரீஷம காராஜன் இந்தப்பூமண்டலத்தை ஏகசக்கிராதிபதியாக ஆளுகின்ற ஆதி பத்தியத்தையும் அளவில்லாத சம்பத்தையும் பெற்றிருந்தும்உலகத்தி லேயாவரும் விரும்பத்தக்க அந்தச் சம்பத்துகளெல்லாம் சொப்ப னத்திலே காணப்பட்ட வஸ்துவைப் போல் அநித்திய மென்றெ ண்ணிச் சர்வேஸ்வரராகிய ஸ்ரீஹரியினிடத்திலும் அவருடையதிருவ டியொன்றே தஞ்சமெனப்பற்றிய சற்புருஷர்களிடத்திலும் பரமமா னபக்தியை அடைந்துஅந்தப்பக்தியினாலே இந்தப்பிரபஞ்சமெல்லா

ம் ஓட்டாங்குச்சுக்குச் சாதனமாக நிச்சயித்துத் தன் மனதை ஸ்ரீகிருஷ்ணருடைய பாதாரவிந்தங்களிலும் வாக்கை ஸ்ரீபரமபதவாஸியினுடைய கீர்த்தனங்களிலும் கைகளை ஸ்ரீயப்பதியினுடைய ஆலயங்களில் திருவலகிடுதல் முதலிய வியாபாரங்களிலும் காதுகளை ஸ்ரீஅச்சுதருடைய கதாசிரவணத்திலும் நேத்திரங்களை ஸ்ரீமுகுந்தருடைய அர்ச்சாவதார திவ்வியமங்களவிக்கிரகத்தைச் சேவிப்பதிலும் தொக்கிந்திரியத்தைப் பாகவதர்களுடைய திருமேனியைப் பரிசிப்பதிலும் நாசிகையை பரந்தாமருடைய சரணாரவிந்தங்களில் அர்ச்சிக்கப்பட்ட திருத்துழாய்ப் பரிமளத்திலும் நாவை ஸ்ரீசர்வேஸ்வரருக்கு நிவேதனஞ்செய்த அன்னமுதலானவைகளிலும் பாதங்களைத் திரிவிக்கிரமருடைய ஆலயத்தைக்குறித்த பிரயாணங்களிலும் தலையை ருஷிகேசருடைய திருவடியை வணங்குவதிலும் இச்சையை விஷயங்களிலேபோக வொட்டாமல் ஸ்ரீவாசுதேவருடைய கைங்கரியத்திலும் செலுத்தித் தான்செய்யுஞ்செய்கைகளையெல்லாம் ஸ்ரீபுருஷோத்தமர் அகண்டாகார பரிபூரணராயிருக்கிறாரென்னும் அபிப்பிராயத்திலே சமர்ப்பித்து ஸ்ரீஹரிதாசர்கள் கட்டளையின்படிப் பூமியைப்பரிபாலனம்பண்ணிக் கொண்டிருந்தான்.

ஒருகாலத்திலே தன்பிரதேசத்தில் ஜலங்கிடையாமற்போய் விட வசிஷ்டர் கௌதமர் முதலிய பரமருஷிகளைக்கொண்டு செய்யப்பட்ட அசுவமேதயாகத்தாலே சகலயாகங்களுக்கும் அதிஷ்டாதாவாயும் சர்வநியந்தாவாயும் விளங்குகின்ற ஸ்ரீபுருஷோத்தமனை ஆராதித்துச்சராஸ்வதிநதியை வரும்படிச்செய்த அந்தராஜருஷியாகிய அம்பரீஷராஜனுடைய யாகசபையிலிருந்த இருத்துவிக்குகள் யாவரும்கண்களிமையாதவர்களாயும் விலையேறப்பெற்ற வஸ்திராபரண பூஷிதர்களாயும் தேவர்களோடு சமானரூபர்களாய்க் காணப்பட்டார்கள் அவனால் அநுவர்த்திக்கப்பட்டுத் தேவதாந்தரங்களைவிட்டுவிலகி ஸ்ரீபகவானுடைய அனந்தகல்யாணகுணானுபவங்களைச் செய்கின்ற ஜனங்களெல்லோரும் பிரளயத்திலே அழிந்துபோகத்தக்க பிரமருத்திராதி சமஸ்ததேவர்களுடைய பதவிகளையும் பிரார்த்தியாமல் சித்தர்கள் கொடுக்கின்ற விபவங்களையும்வெறுத்து ஸ்ரீமுகுந்தனையே இருதயகமலத்தில்சாக்ஷாத்கரித்துச் சொரூபானுபவத்திலே திருப்தியை யடைந்திருந்தார்கள், இப்படியாவரையும் அநுவர்த்திக்கச்செய்துகொண்டு தான்வீடு, பெண்டு, பிள்ளை, பந்து, ரதகஜதுரகபதாதிகள் அளவில்லாதபொக்கிஷம் இவற்றிலுண்டாகிய பற்றுகைகளையொழித்துக் கர்மயோகபக்தி யோகங்களினாலே ஸ்ரீஹரியைச்சந்தோஷிப்பிக்கச்செய்து வருவதுமல்லாமல்

தனக்குச் சமானமானசீலத்தையுடைய பாரியோடு ஒருவருஷகாலம்
துவாதசியை ஆசரிக்கவேண்டுமென்ன எண்ணங்கொண்டு தசமிஏகாதசி
துவாதசிகளைச் சாஸ்திரவிதிப்படி அநுஷ்டித்துக்கொண்டு வருகிறநா
ளில் அந்தமகாநுபாவனானவன் கார்த்திகமாசத்தில் யமுனாதீரத்தை
யடைந்து அந்தவிரதத்தினுடைய முடிவாகிய கிரமப்படி மூன்றுநா
ளும் உபவாசமிருந்து யமுனாநதியில் நீராடி அங்குள்ள மதுராவனத்தி
லே ஸ்ரீசர்வேஸ்வரராகிய பரந்தாமனைத் திருமஞ்சனமாட்டிக் கந்த
புஷ்பாதிகளால் அலங்கரித்து நானாவிதமதுரபக்ஷ்யவர்க்க முதலானவை
களை நிவேதனஞ்செய்து பாகவதோத்தமர்களாகிய யோகிகளையும் பி
ராமணர்களையும் பூசித்துக்கொம்புகளுக்குத் தங்கப்பூணும் குளம்புகளு
க்கு வெள்ளிப்பூணும் பூட்டிக் கழுத்துக்கு ஸ்வர்ணாபரணங்களை யணி
ந்து பட்டுவஸ்திரங்களைத்தரித்து நல்லுருபமும் சாதுவுமாகிய அறுப
துகோடி தலையீற்றுப்பசுக்களைக் கறவைப்பாத்திரமுதலிய உபகரணங்
களோடு தானம்பண்ணி அவர்கள் அறுசுவைப் பதார்த்தங்களுடன் தி
வ்விய அன்னத்தைப்புசிக்கச்செய்து அவர்களுடைய அநுமதியைப்
பெற்று ராஜருஷியாகிய அம்பரீஷமகாராஜன் துவாதசிபாரணைபண்
ணயத்தினமாயிருக்கும்போது ஸ்ரீசங்கரபகவானுடைய அம்சமாகி
ய துருவாசரானவர் அதிதியாகவந்தார் அதிதியாகவந்த அந்தமகாமு
னிவரை எதிர்கொண்டுபோய் அர்க்கியாதி உபசாரங்களைப்பண்ணிப் பூ
ஜித்துத் தன்கிரகத்திலே புசிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தான் அந்த
ப்பிரார்த்தனையை அங்கீகரித்து இவனுடைய விரதத்தைப்பங்கஞ்செ
ய்யவேண்டுமென் றெண்ணங்கொண்டு நித்தியகர்மத்தை முடித்துவ
ருகிறேனென்றுபோய் யமுனைநதியில்தீர்த்தமாடிப் பாரணைப்பொழு
து தவறிப்போம்படி அந்நீரிலேயொளித்திருந்தார் அப்போது துவா
தசிபாரணைக்கு அரைமுகூர்த்தகாலமாத்திர மிருக்கிறபடியால் சிலரை
யனுப்பி அந்தத்துருவாசமகாருஷியைத்தேடி அழைத்துவரும்படி உ
த்திரவுசெய்ய அவர்களெங்கும் போய்ப்பார்த்துங் காணமல்வந்து வி
ட்டனர்கள் அதனால்மனதிலேகிலேசமடைந்து அம்பரீஷமகாராஜ னா
னவன் அங்கிருந்தமுனிவர்களைப்பார்த்து வாரீர்யோகீஸ்வரர்களே அதி
தியாகவந்தபிராமணோத்தமரைவிட்டுப்பாரணைசெய்தால்பிராமண அப
சாரதோஷஞ் சம்பவிக்குமே துவாதசிபாரணைகாலந் தப்பிப்போனா
ல் மகாதோஷம்நேரிடுமே ஆகையால் இந்த இரண்டுதோஷங்களில் ஒ
ன்றுஞ் சேராம லிருக்கும்படி அடியேன் முன்னோர்கள் அசனதுல்லி
யமாகவும் உபவாசதுல்லியமாகவுஞ் சொல்லியிருக்கிற சலபானம் ப

ண்ணுகிறேனென்று அவர்களுடைய அனுமதியைப்பெற்று ஸ்ரீபகவா
னைத் தியானஞ்செய்து திருத்துழாயுதகமுண்டு தூருவாசருடைய வர
வை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

உடனே தூருவாசருந் தீர்த்தமாடித்துவாதச ஊர்த்துவபுண்டர
ங்களைத்தரித்து மந்திரராஜமாகிய திருமந்திரத்தைச் செபித்து நித்திய
கடனை முடித்துக்கொண்டு சீக்கிரத்திலே அந்தமகாராஜனிடத்தில் வந்
து அவன் துளசிதீர்த்தம் பாணம்பண்ணியதையறிந்து யுகாந்தகால ரு
த்திரபகவானைப்போல அதிககோபத்தையடைந்துதமக்கெதிரே அஞ்
சலிபந்தஞ்செய்துநிற்கின்ற மகாநுபாவனாகிய அம்பரீஷமகாராஜனை
ப்பார்த்து வாராய் அம்பரீஷனே இகலோக ஐஸ்வரிய கர்வத்தினாலே
உன்மத்தனாகி ஸ்ரீவிஷ்ணுபக்தி இல்லாதவனாக இருந்தும் பகவத்பக்த
னாக உன்னை நீயேசிலாகித்துக்கொண்டு அதிதியாகவந்த என்னை அங்கீ
கரிப்பதைப்பார்க்கிலும் உயர்ந்தவிரதமுமுண்டென்றுநினைத்துநீசெ
ய்த துவாதசிபாரணையின்பலத்தை இதோகாண்பிக்கிறேனென்றுசொ
ல்ல அம்பரீஷமகாராஜன் திருத்துழாயுதக முண்டேனேயல்லாமல் உ
ம்மை அவமதித்துப்புசிக்கவில்லையென்று வேண்டிக்கொண்டினன் அ
தையும்பாராமல் அங்கிருந்தமுனிவர்களும்மற்றவர்களுந்திடுக்கிட்டுப்
பயப்படும்படித்தன்ஜடாமகுடத்தில் ஒருசடையைப்பிடுங்கி இந்தச்ச
டையில் உற்பவிக்கும் பூதத்திற்கு நீஇரையாகக்கடவாயென்று சபித்து
அந்தச்சடையைப் பூமியிலெறிந்துமந்திரித்துச்சாபஜலத்தைவீசினர்.

அந்த மகாராஜனானவன் இதற்கு நம்மால்செய்யத்தக்கதொன்று
மில்லையென்று சர்வேஸ்வராகிய ஸ்ரீகிருஷ்ணபகவானைத் தியானஞ்
செய்து கொண்டிருந்தனன் உடனே அந்தச்சடையிலிருந்து பயங்க
ரரூபத்தையுடைய கிருத்திமமானது புறப்பட்டு கையிலேசூலத்தைப்
பிடித்துத் தேசோராசியை இருட்படலமானதுவெல்லஉத்தேசித்துப்
போவதுபோலப் பரிசுத்தமனசையுடைய அந்தப்பாகவதோத்தம
னைக்கொலைசெய்யக்குறித்து விரைந்தோடிவந்தது அங்கேயிருந்தயா
வரும் அந்தப்பூதத்தைக்கண்டு பிராணபீதியுடையவர்களாய்த் திக்குவி
திக்குகளிலோடினார்கள் ஸ்ரீவைஷ்ணவபரமோபாய நிஷ்டனாகிய அம்
பரீஷமகாராஜனொருவனும் தூருவாசமகாருஷியினுடைய சாபத்துக்
கும் அவராலேவப்பட்டு வருகிறபூதத்துக்கு மெவ்வளவுஞ்சலிக்காமல்
நிர்ப்பயனாய் ஸ்ரீவாசுதேவனைத்தியானஞ்செய்து கொண்டிருந்தனன்
உடனே சர்வேஸ்வரராயும் சர்வாந்தரியாமியாயும் சர்வநியந்தாவாயு
ம் விளங்காநின்ற ஸ்ரீஹரியினுடைய அடியார்களுக்குச்சிறிது தீங்காவ
துசெய்யுமவர்களை நாசஞ்செய்வதே தொழிலாகவுடைய ஸ்ரீசுதரிசன

மென்னுந் திருநாமங்கொண்ட ஆயுதராஜமாகிய சக்கரமானது மனோ வேகமும் பின்னிடும்படி அனந்தமாயிரஞ் சூரியர்களைப்போலக் கிரணராசிகளைப் பரப்பிக்கொண்டு விரைந்துவந்து அந்தக்கிருத்திமத்தைத் தன்கிரணதீக்ஷணத்தாலே சாம்பராக்கிவிட்டு அதையேவிய துருவாசரைக் குறித்துவரும்போது அந்தச்சுதரிசனத்தின்வரவைக்கண்டு நடுங்கி இதென்ன நம்முடையபிரயத்தினமும் நிஷ்பலத்தையடைந்து விபரீதமாய் முடிந்ததேயென்று கிலேசத்தையுடையவராய் உயிர்தப்பினால்போதுமென்னும் எண்ணத்தோடோடி மேருமுதலிய பர்வதகுகைகளிலும் சமுத்திரமுதலிய ஜலப்பிரதேசங்களிலும் பாதாளத்திலும் அங்கேயெல்லாம் பின்சென்றுதுரத்திச் சர்ப்பத்தைப் போலச்சீறி அக்கினிசுவாலைகளை வீசிக்கொண்டு வருவதைப்பார்த்து ஸ்ரீகயிலாயத்துக்குச்சென்று பரமசிவமூர்த்தியினிடத்தில் சரணாகதஞ்செய்ய அந்த ருத்திரபகவானவர்சொல்லுகிறார்.

வாரீர்முனீந்திரரே நாமெல்லோரும்வசிக்கா நின்ற இந்தப்பிர்மாட்டமும் இதுபோன்ற அநேக அண்டசமூகங்களும் எந்தப்புருஷோத்தமரிடத்திலே உற்பவித்து மறுபடியுங் காலாந்தரத்தில் லயமடைகின்றதோ அந்தச்சர்வசுவாமியினுடைய பக்தனிடத்தில் அபசாரப்பட்டஉம்மைரக்ஷிப்பதற்கு நானும்தக்ஷன்முதலாகிய நவபிரஜாபதிகளும் சனற்குமாரநாரதர்முதலிய ருஷிகணங்களும் சமர்த்தர்களல்லோம் எனக்கும் மற்றலோகேஸ்வரர்களுக்கும் வேண்டியஆயுதங்களை யநுக்கிரகஞ்செய்கின்ற ஆயுதராஜமாகிய இந்தச்சக்கரத்தினுடைய தீக்ஷணத்தையே நாங்கள்சகிக்கமாட்டோமென்றால் உம்மைநாங்களெப்படி ரக்ஷிக்கப் போகிறோமென்று சொல்லியருளினர்-அந்தச்சங்கரபகவானிடத்தில் செலவுபெற்றுக்கொண்டு மகாமேருவிற்போய்ச் சதுர்முகனை அடைக்கல யடைந்தனரென்று சொல்லுகின்ற ஸ்ரீசுகப்பிர்மருஷியைப்பார்த்துப் பரீக்ஷித்துமகாராசன் சொல்லுகிறார் வாரீர்முனிராஜரே மனோவேகமும் முன்னிடத்தக்க வேகமுள்ளசக்கரமானது அந்தத்துருவாசருக்குப் பின்சென்று காலதாமசஞ்செய்வதற்குக் காரணமென்னென்றுகேட்க,ஸ்ரீசுகர்சொல்லுகின்றார்வாராய்நரேந்திரனாகியபரீக்ஷித்துமகாராஜனே அந்தத் துருவாசரானவர் பிராணபீதியடைந்துமுதுகுகாட்டியோடுவதினாலும் ஸ்ரீசர்வேஸ்வரருடைய அடியார்கள்விஷயத்திலேசெய்த அபசாரத்தை அவர்கள்பார்த்து மன்னித்தாலொழிய வேறே திக்கில்லாமையையும் அவர்களுடைய பிரபாவத்தையும் யாவருமறிந்துகொள்ளவேண்டுமென்கிற எண்ணத்தினாலுஞ்சுதரிசனமானது அந்தத் துருவாசருக்குப்பின்னேதானே சென்றதென்று சொல்லி

முடித்துவிட்டு ஸ்ரீசுகரானவர் துருவாசரைக்குறித்துச் சொல்லுகின்றார். வாராய்பரீக்ஷித்துமகாராஜனே தன்னையடைக்கலமடைந்த துருவாசமகாருஷியைப்பார்த்துப் பிரமதேவன்சொல்லுகின்றார் வாராய்குழந்தாய் சகலலோகங்களும் ஓரண்டத்துக்குட்பட்ட எனக்கு இருப்பிடமாகிய சத்தியலோகமும் திவிபரார்த்த மென்னப்பட்ட என்னுடைய ஆயுளின்பூர்த்தியாகிய தம்முடைய லீலையின்முடிவிலே தகிக்கவேண்டுமென்று காலரூபியாகிய ஸ்ரீபகவானுடையபுருவநெரிப்புமாத்திரத்திலே நாசத்தையடைந்துபோம் நானும் ருத்திரனும் இந்திரனும் தக்ஷன்முதலியபிரசாபதிகளும் சமஸ்ததேவர்களும் அவருடையகட்டளைக்குள்ளடங்கிச் சுதரிசனலாஞ்சனையைச் சிரமேலேபெற்றுக்கொண்டு லோகேஸ்வரர்களா யிருக்கிறோம் அந்தச் சர்வசுவாமியினுடைய பக்தனுக்குத்தீமைசெய்த உன்னைக்காப்பாற்ற என்னால் முடியுமோ முடியாது ஆகையால் ஸ்ரீசர்வேஸ்வரனையே சரணாகதஞ்செய்யென்று பிரமதேவனாலே நிராகரிக்கப்பட்ட துருவாசரானவர் திருப்பாற்கடலின் வடபக்கத்திலேநின்று ஸ்ரீபுருஷசூக்தத்தாலே பரந்தாமனைத் தியானித்து அச்சுதா அநந்தா மாதவா சற்புருஷர்களுக்கு இஷ்டநாயகா அபராதியாகியஎன்னை ரக்ஷிக்கக்கடவீர் உமது அடியார்களுடைய பிரபாவத்தையறியாமல் அபசாரஞ்செய்துவிட்டேன் உம்முடைய சகஸ்திரநாமங்களி லொன்றை யுச்சரித்தவர்கள் நரகதுக்கத்திலிருந்தும் விடுபட்டு நித்தியாநந்தத்தை யடைபவர்களன்றோ இப்போது அடியேன்படுகின்ற சஞ்சலத்தை நிவாரணஞ் செய்தருளவேண்டுமென்று நாநாவிதமாய்ப்பிரார்த்திக்கின்ற துருவாசருக்குஸ்ரீசர்வேஸ்வரரானவர் பிரசன்னராய்வந்து திருவாய்மலர்ந்தருளுகின்றார்.

வாராய்துருவாசனே ஸ்திரீகள், புத்திரர்கள், தனம், கிருகம், ஆப்தர்கள் இகலோகபரலோகசௌக்கியங்கள் இவைகளெல்லாவற்றிலும்பற்றில்லாமல் என்னையே முக்கியகதியாகநம்பிச் சரணாகதஞ்செய்திருக்கிறவர்களைவிட்டு நான் என்னையாவது பரமகருணாரூபியாயும் பிராணபதமாயும் என்மார்பின்கணிருக்கின்ற லட்சுமியையாவது அபேக்ஷிக்கிறதில்லை சமபுத்தியும் என்னிடத்திலேயே ஸ்திரமான இருதயத்தையுமுடைய அடியார்கள் அநுகூலமாகிய தன்பர்த்தாவைக் குலஸ்திரீதன்னொழுக்கத்தினாலே தன்வசப்படுத்திக் கொள்வதுபோல என்னைத் தங்கள்வசப்படுத்திக்கொள்வார்கள் அவர்கள் என்சேவையினால் திருப்தியடைவார்களே யல்லாமல் என்சேவையால் அடையப்படுகிறசாலோகமுதலிய சதுர்விதமோக்ஷங்களையும் இச்சியார்கள். ஆகையால்சிலநாளிலே நாசத்தையடைகின்ற ஐஸ்வரியத்தில் அவர்களுக்கு விரு

ப்பயில்லையென்றுசொல்லவும் வேண்டுமோ என்னுடைய இருதயத்தி
லே அவர்களும் அவர்களுடைய இருதயத்திலே நானும் எப்போதும்
வாசமாயிருப்போம் அவர்களாலே வசீகரிக்கப்பட்ட பலைசை யுடை
யவனாகவும்-அவர்களிடத்திலே பிரியனாகவும் இருக்கிறேன் என்னைவிட்டு
வேறொன்றையும் அவர்கள் அறிகிறதில்லை நானும் அவர்களைவிட்டுமற்
றொன்றையும் எவ்வளவும் அறிகிறதில்லை வேதங்களுக்கும் விரிஞ்சிவாதிக
ளுடைய ஞானப்பிரகாசத்துக்கும் எட்டப்படாத நானே பரதந்திரமா
னயானையைப்போலப் பக்தபராதீனனாக விருக்கிறேன். ஆதலினால் எ
வனிடத்திலிருந்து உனக்கு உபத்திரவம் உண்டாயிற்றோ அவனையே சீ
க்கிரமாக அடையக்கடவாய் நிரபராதிகளாகிய சாதுக்களிடத்திலே பி
ரயோகிக்கப்பட்டதவப்பிரபாவமானது பிரயோகஞ்செய்தவனுக்கே
அமங்கலத்தையுண்டாக்கும் பிராமணர்களுக்குச் சுவாயத்தமாகிய த
பவித்தை இந்தஇரண்டும் விநயமில்லாத அகங்காரிக்கு அநர்த்தகர
மாயிருக்கும். வாராய் ருத்திராம்சனாகிய துருவாசனே உனக்கு மங்க
ளமுண்டாகக்கடவது நாபாகபுத்திரனான அம்பரீஷனையடைந்து அந்
தமகானுபாவனிடத்தில் க்ஷமைகேட்டுக்கொள் அப்போது இந்தச்சுத
ரிசனத்தாலே உனக்குயாதொருபத்திரவமு முண்டாகாதென்று திரு
வாய்மலர்ந்தருளிச் சர்வேஸ்வரரானவர் அந்தரத்தானமாயினர்.

வாராய்பரீக்ஷித்துமகாராஜனே இந்தப்பிரகாரம் ஸ்ரீபகவானாலே
கட்டளையிடப்பட்டவராய்த் துருவாசரானவர் ஆயுதராஜமாகிய ஸ்ரீவி
ஷ்ணுசக்கரத்தினுடைய கிரணசுவாலைகளால் தம்முடையதேகமெலித்
து ஓடி அம்பரீஷராஜருஷியினுடைய பாதங்களைப்பிடித்துக்கொண்டு
நான்செய்தஅபராதத்தை க்ஷமித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்த
னர் அம்பரீஷமகாராஜன் அந்தத்துருவாசமகாருஷியானவர் தன்னு
டையகால்களைப் பிடித்துக்கொண்டதினாலே அவர்முன்செய்த வியா
பாரத்தை எவ்வளவும் நினையாமல் மிகவும் இலச்சையுடையவனாய் அ
வரிடத்திலே அதிகதயைவைத்து ஸ்ரீஹரியினுடையசக்கரத்தைத்தோ
த்திரம்பண்ணினான்

## அம்பரீஷன் தோத்திரம்.

வாரீர் சுதரிசனரே " அக்கினியும், சூரியனும், சந்திரனும், உம்மு,
டைய சகஸ்திரபாகங்களிலொருபாகமன்றோ பிருதிவி, அப்பு, தேயு
வாயு,ஆகாசங்களும், சப்தாதிவிஷயங்களும், ஸ்ரோத்திராதி இந்திரியங்
களும், தேவரீரேயன்றோ உம்மைக்குறித்து அவரவர்கள்செய்த தத்து
வத்துக்குத்தக்கமுறையே பிர்மருத்திரேந்திராதிகளுக்குத் தண்டசூல
ம்வச்சிரமுதலிய ஆயுதங்களைத்தயைசெய்கின்ற தயாசீலராகிய ஆயுத

த்துக்கொண்டு எவ்வளவுகாலம்வாராமலிருந்தாரோ அவ்வளவிலேயொருவருஷப்பூரணமாச்சுது அந்தவொருவருஷகாலமும் அம்பரீஷமகாராஜன் ஆகாரமாகத் தீர்த்தத்தையேபானஞ்செய்துகொண்டு ஆதித்தியங்கொடுக்கத் துருவாசமுனிவருடையவருகையையெதிர்பார்த்திருந்து அவர்போஜனஞ்செய்துபோனபின்பு பரிசுத்தமானசேஷித்தையே புசித்தான். அந்தப்பரமவைதிக நிஷ்டனாகிய மகாராஜன் துருவாசருடைய வியசனத்தையும் அதனுடையவிநாசத்தையும் நோக்கித்தன்னுடையவீரியத்தையும்ஸ்ரீபரமபுருஷருடைய பிரபாவமாகவேயெண்ணிக்கொண்டான், இப்படிப்பட்ட அநேகதிவ்வியகுணங்களையுடையவனாகிய அம்பரீஷராஜருஷியானவன் பரமாத்துமாவாயும் அநந்தகல்யாணகுணபரப்பிரமாவாயும் விளங்காநின்ற ஸ்ரீவாசுதேவரிடத்திலேயே கிரியாகலாபங்களினாலேநன்றாய்ப் பக்தியைச் செலுத்திக்கொண்டிருந்தான் அந்தப்பக்தியினால் சத்தியலோகமுதலான உலகங்களையெல்லாம் நரகத்துக்கொப்பாகஎண்ணித் தனக்குச்சமானகுணங்களையுடைய புத்திரர்கள்வசத்திலே இராச்சியத்தைவிட்டுத் தபோவனத்திலே பிரவேசித்துச் சத்துவராசதமசுக்களாகிய பிரகிருதிகுணகாரியங்க ளெல்லாவற்றையுமொழித்து ஸ்ரீகேசவருடைய திருவடிகளில் மனதைநிறுத்தித் தவஞ்செய்தான்.

இந்தப்புண்ணியகரமான அம்பரீஷ உபாஜ்ஞானத்தை யாவனொருவன் பக்தியினாலே புகழ்ந்து தியானம்பண்ணுகிறானோ அந்தப்புருஷசிரேஷ்டன் பரமபாகவதனாவானென்று சுகப்பிரமருஷியானவர்பரீக்ஷித்து மகாராஜனுக்குத் திருவாய் மலர்ந்தருளினார். இது சூதபுராணிகரால் நைமிசாரணிய மகாருஷிகளுக்குச் சொல்லப்பட்டது.

அம்பரீஷதுவாதசிசரித்திரம்-முற்றிற்று.

ஸ்ரீஅம்பரீஷாயநமஃ

ஸ்ரீ சு க ப் பி ர் ம ரு ஷ யே ந மஃ

கலிவிருத்தம்.

மாயன்வாழி மலர்மங்கைவாழியே ... ... *
தூயவைணவத் தொன்னெறிவாழியே ... ... *
ஆயபத்தொடொன் றுந்திதிவாழியே ... ... *
வாயவன்னது நோற்பவர்வாழியே .. ... ... *

ஏகாதசிமகத்துவம்-முற்றிற்று.